Regd. No. 2975

ஸ்ரீ:

# ஸ்ரீ ராமாநுஜன் 203

ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்

Editor: **P. B. Annangaracharya,** L. Kancheepuram.

| ஸம்புடம் 17 | 1965 நவம்பர்மீ<br>விசுவாவசுஹு கார்த்திகைமீ | ஸஞ்சிகை 11 |
| --- | --- | --- |

# அடியேன் செய்யும் விண்ணப்பம்

"மநோரதாநாம் அதடா: ப்ரவாஹா:" என்றுர் காளிதாஸ மஹாகவி. உ
ரதங்கள் செல்லப் புறப்பட்டால் தட்டுத்தடங்கலில்லாமல் செல்வதென்பது நிச்சய
பல தட்டுமுட்டுக்கள் ஏற்படவுங்கூடும். இங்
மநோரதங்களின் விஷயத்தில் கிடையாது.
ரதங்கள் எங்கும் தடையின்றி ப்ரஸரிக்கு
கவியின் கருத்து. இது உண்மைதானே, இ
அடியேனுக்குப் பலபல மநோரதங்கள்
துண்டு. அவை பகவத் பாகவதாசார்ய
பெரும்பாலும் நிறைவேறி வருகின்றன. இ
'உபந்யாஸ சதத்வயம்' வெளியிடவேணு
மநோரதமுண்டாயிற்று. இதை விரை
வெளியிடவேணுமென்கிற அபிருசியும்
எப்படி ஸாத்யமாகும் ? எழுதிவைப்ப
அச்சிடவும் வேண்டியிருக்கிறதே; ஆ
குறைபட்டிருக்குமித்தருணத்தில் இ
கட்டுவோம் !" என்கிற விசாரமே அ
வில்லை. *ந ஹி கச்சித் க்ஷணம
கர்மக்ருத்* என்கிற கீதா சுலோகம்



அவதரித்ததென்று நெடுநாளாகவே நினைப்பதுண்டாதலால் அதன்

காரியங்களில் இதுவும் ஒரு காரியமாக அமைந்து சதத்வயத்தில் முதல் சதம் முடி பெற்றது. இரண்டாவது சதமும் பெரும்பாலும் அச்சாகிவிட்டது. ஆனாலும் அது பூர்த்தியாக வெளிவருவதற்கு உரியகாலம் உத்தராயணமேயாதலால் முதல் சதத்தை அவரவர்கள் ஒரே ஸம்புடமாக பயிண்டு செய்வித்து வைத்துக்கொள்கவென்று இப்போதே இது பூர்த்திசெய்து வெளியிடலாகிறது.

**முக்கியக் குறிப்பு** :—ஐப்பசி (அக்டோபர்) மாதத்துப்பத்ரிகை (202) முன்னமே வெளிவந்துவிட்டதாதலால் இது கார்த்திகை (நவம்பர்) மாதத்துப் பத்ரிகையென்பது அன்பர்களுக்கு நினைவிலிருக்கத்தக்கது.

... ...

## ஸ்ரீ ராமாநுஜன் சந்தா செலுத்தியவர்கள்

175. ஸ்ரீமதுபயவே. முதலியாண்டான் சின்ன ஸ்வாமி
176. „ T. ராமாநுஜமையங்கார், திருப்பாபுலியூர்
177. „ R.P. ராமையங்கார் ஆழ்வார் திருநகரி
178. „ S. ராஜமையங்கார், ஈரோடு
179. Sri K. S Krishnaswami, Madras-18
180. ஸ்ரீ தேவநாதஸ்வாமி, பொன்னேரி
181. Sri R. B. Chari, I.A.S, Bombay
182. ஸ்ரீ V. ராஜகோபாலப்பிள்ளை, சீர்காழி
183. Sri M. S. Nataraja Chettyar, G.T.
184. ஸ்ரீ P. A. நாராயணன், பொத்தனூர்
185. Doctor Sri S. Prasannam, பெரியகுளம்
186. Sri R. Ramaratnam Iyengar, Jamshedpur, Life Member



...ரீ. ஸ்ரீமந்நாராயண ஜீயர் ஸ்வாமிகள் 1965 ஜனவரி மாதத்தில் திருவல்லிக்கேணி ...ி ஸன்னிதியில் நடத்தின கோடி துளஸியர்ச்சனையில் திருவீதி கோஷ்டி.

# இடையில் ஆப்தர்களின் ஆனந்தபரீவாஹங்கள்

அன்பர்களே! உத்தேசித்த இருநூறு உபந்யாஸங்களில் எண்பத்துநான்கு உபந்யாஸங்கள் இரண்டு ஸம்புடங்களில் வெளிவந்தன. இப்போது மூன்றாவது ஸம்புடம் வெளிவருகின்றது. முதல் ஸம்புடம் வெளிவந்தவுடனும் இரண்டாவது ஸம்புடம் வெளிவந்தவுடனும் பலபல மஹான்கள் தங்களுடைய ஆனந்த பரீவாஹரூபமான பத்ரிகைகளைப் பரம ப்ரீதியுடன் அனுப்பிக் கொண்டேயிருந்தார்கள். அவற்றுள் ஒரு பத்ரிகைமட்டும் [ஸ்ரீமதுபயவே. அட்வொகேட். V. ராஜகோபாலாசாரியர் ஸ்வாமிகளின் ஆங்கிலக்கட்டுரை கொண்டது.] நாற்பத்தெட்டாவது உபந்யாஸத்தின் முன்னே வெளியிடப்பட்டுள்ளது. மற்றும் பல பத்ரிகைகளுள் சில மட்டும் இங்கு இப்போது வெளியிடப்படுகின்றன. இந்த வெளியீடு ஸ்வப்ரதிஷ்டைக்காகச் செய்யப்படுவதன்று. அன்பர்களின் திருவுள்ளவுகப்பு நமக்குப் பரமோத்தேச்யமாகையாலே, அதனை மற்றுள்ள அன்பர்களும் அறிந்து உகக்க வேணுமென்கிற அபிநிவேசங் கொண்டே செய்யப்படுகிறது. காளிதாஸமஹாகவி



ஸ்ரீமத் பரமஹம்ஸ திருமலை திருப்பதி
பெரிய ஜீயர் ஸ்வாமி.

சாகுந்தல நாடகத்தில் "ஆபரிதோஷாத் விதுஷாம் ந ஸாது மந்யே ப்ரயோகவிஜ்ஞாநம், பலவதபி சிக்ஷிதாநாம் ஆத்மந்யப்ரத்யயம் சேத:" என்றுரைத்திருப்பது ப்ரஸித்தம். அவரவர்கள் தாம்தாம் எழுதியவற்றைத் தாங்கள் உகந்துகொள்ளவே ப்ராப்தமாகும். ஆனாலும், பிறருடைய உகப்பு எத்தகைத்து என்று தெரிந்துகொள்ள ஆவல் இல்லாமலிராது. விவேகிகளான பலரும் உகக்கிறார்களென்று தெரியவந்த பிறகுதான் தங்களுடைய மனம் த்ருப்திபெறும்—என்பது மேலெடுத்துக் காட்டிய காளிதாஸ ச்லோகத்தின் பரமதாற்பரியம். அதன்படி ஸ்வாத்ம ப்ரத்யயத்திற்காகவும், மஹான்களின் ஸ்ரீமுகங்களை நாம் கௌரவிக்கவேண்டியதற்காகவும் இது செய்யலாகிறது.

அரசாணிபாலை வேங்கடாத்வரி ஸுபாஷித கௌஸ்துபத்தில் ஒருசுலோக மெழுதியுள்ளார்;-

**"வாசாடோக்தௌ வாகம்ருதே வா ஸுகவீநாம்**
**ஸ்தோகப்ரஜ்ஞாஸ் துல்யத்ருசோ ஹந்த பவந்தி.**
**கோமாயூநாம் கோகிலயூநாமபி சப்தேஷு**
**ஏகாகாரா மாநஸவ்ருத்திர் மஹிஷாணும்.**

(இதன் கருத்தாவது) சிலர் ஒரு பொருளுமில்லாத வம்புப்பேச்சுக்களை அபரிமிதமாகப் பொழிகிறார்கள். சிலர் அமுதமன்னமென்மொழிகளைத் தேன்மாரியாக வர்ஷிக்கிறார்கள். பஹுச்ருதர்களென்று விருது பெறுவதற்காக எதற்கும் செவி கொடுப்ப

வர்கள் சிலருண்டே; அவர்களுக்கு எல்லாப் பேச்சுகளும் துல்யமாகத்தானிருக்கும்; காட்டில் ஒருபுறம் குள்ளநரிகள் ஊளையிடுவதும், மற்றொரு புறம் குயில்கள் பஞ்சமராகம் பாடுவதுமாயிருக்கையில் இவையிரண்டும் எருமைக் கடாக்களின் காதுகளில் விழாமலிருக்குமா? விழத்தான் விழும். ஆனால் இரண்டுக்குமுள்ள வாசியைச் சிறிதேனும் அறியவல்ல ஜந்துவன்றே அது — என்பதாம். இந்த ஸுபாஷிதத்தை ஒரு ஸபையில் ஒருகால் அடியேன் விரிவாக உபந்யஸிக்க நேர்ந்தது; அப்போது உபஸ்திதர்களாயிருந்த வித்வான்கள் பலரும் முடிவில் அடியேனிடம் வந்து இந்த சுலோகத்தை யெழுதித் தரவேணுமென்று கோரி வாங்கிக்கொண்டார்கள். உண்மையில் இந்த சுலோகம் ரஸிகர்களின் நெஞ்சை மிகமிகவுருக்குவதேயாகும். உலகப் போக்கைக் கையிலங்கு நெல்லிக்கனியாக வெடுத்துக்காட்டுமதன்றோ இது. இந்த சுலோகத்திற்கு இலக்கான வர்கள் அடியேனுச்குப் பத்ரிகை யெழுத ப்ரஸக்தியில்லை; பண்டிதர்களும் விவேகிகளும் ரஸிகர்களுமான மஹான்களின் ஸ்ரீமுகங்களே கிடைக்கின்றன; அவற்றை உலகம் வாசிக்கச் செய்யவேண்டுவது உரியதேயாகும். ஒவ்வொரு ஸ்ரீமுகமும் மிக விரிவாக விருப்பினும் ஸாரஸம்க்ஷேபமேயாகிறதிங்கு. ... ... ❋

1. **ஸ்ரீஉவே. N. ஸ்ரீநிவாஸாசாரியார். அஹோபிலம் தேவஸ்தானம் மானேஜர். மதுராந்தகம். (Now) அஹோபிலம்.** (இந்த ஸ்வாமி 24, 25-7-65ல் ஸாதித்த இரண்டு ஸ்ரீ முகங்களின் ஸம்க்ஷேபம்.)......அவ்விடத்து ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகையை மிகுந்த க்ருதஜ்ஞதையுடன் பெற்றுக்கொண்டு பூர்த்தியாக ஸேவித்தேன். இன்னும் இங்குள்ள வித்வான்களுக்கும் பத்ரிகை கிடைத்து ஆனந்த பரிதர்களாய் வாசித்து வருகிறார்கள். தேவரீர் திருமேனி பாங்கில்லாமலிருக்குமிந்த ஸந்தர்ப்பத்திலுங்கூட உபந்யாஸங்களை விஸ்தாரமாகவும் அதிசீக்கிரமாகவும் எழுதி வெளியிட்டிருப்பது பற்றி இவ்விடம் எல்லோருக்கும் ஆச்சரியமாகவேயிருக்கிறது. ஸ்ரீமத் அழகிய சிங்கர், அனுஷ்டான— ஆராதன—காலக்ஷேபங்களுக்கே அவகாசம் போராதிருப்பதால் ஸ்ரீ ராமாநுஜனை நேரிட கடாக்ஷித்தருள அவகாசமில்லாமற்போனாலும் வித்வான்கள் விஜ்ஞாபிப்பதனால் விஷயங்களைத் தெரிந்துகொண்டு திருவுள்ளம் ப்ரஸன்னமாகவேயிருக்கிறபடி. அடியேனுடைய ஸொந்த அபிப்ராயமொன்று; "இன்று இந்த விஷயம் உபந்யஸிக்க ஸ்ரீ அழகியசிங்கர் நியமனமாகிறது" இத்யாதி ரூபமான அவதாரிகைகள் அவசியம் இருந்திருக்கவேண்டியதில்லை.......நேற்று ஸாரநிஷ்கர்ஷமென்கிற ஒரு விஷயத்தைப் பற்றியே ஒவ்வொரு வித்வானும் தனித்தனி உபந்யஸிக்க வேணுமென்று ஸ்ரீ அழகியசிங்கர் நியமித்தாச்சுது. அப்படியே எல்லாரும் கூடவேயிருந்து உபந்யஸித்தார்கள். நன்றாகவே யிருந்தது. N. Srinivasan. [இங்கு அடியேனுடையவொரு சிறு விண்ணப்பம்.] இந்த ஸ்ரீ முகம் ஸாதித்த மானேஜர் ஸ்வாமி அடியேனுக்கு நாற்பது வருஷங்களுக்கு மேலாகப் பரிசிதர்; பரமஸாத்விகர். அடிக்கடி கடிதங்களெழுதுவது மட்டுமன்றிக்கே மாதம் ஒரு முறையாவது தவறாமல் நேரில் ஸேவை ஸாதிப்பர். "விநயமஸ்ருணோ வாசி நியம:" என்று பவபூதி சொல்லியிருப்பதை இவரோடு ஸந்திக்கிறபோதெல்லாம் அடியேன் நினைப்பதுண்டு. அடியேனுடைய பத்ரிகைகளையும் க்ரந்தங்களையுமெல்லாம் இந்த ஸ்வாமி அந்நாள் தொடங்கி இந்நாள் வரையில் வெகு ப்ரீதியுடன் கடாக்ஷிப்பவர். எந்த விஷயத்திலும் சித்த விகாரம் லவலேசமுமடையார். "த்ரஸ்ய ப்ரஹ்மவிதாகஸ:' என்கிற வசனத்தைப் பரிபாலிப்பவர் இந்த ஸ்வாமி யொருவரே யென்று அடியேன் திடமாகக்

கூறுவேன். ஸ்நேஹபாத்ரமென்று சில வ்யக்திகளைத்தான் குறிப்பிட முடியும்; அன்னவர்களில் இந்த ஸ்வாமி ப்ரதம பரிகணநீயரென்று முப்பத்தைந்து வருடங்களுக்கு முன்பு கொண்டகொள்கை மேன்மேலும் அபிவ்ருத்தமாகியே வருகிறது. "உபமாநமசேஷாணாம் ஸாதூநாம்" என்று ப்ரஹ்லாதாழ்வானைப் பற்றிப் பராசரமுனிவர் சொன்னதையும் அடியேன் இந்த ஸ்வாமி விஷயத்திலே நினைப்பதுண்டு. ப்ரத்யக்ஷத்திற்போலவே பரோக்ஷத்திலும் வர்த்திக்கிற வ்யக்திகள் மிகமிக துர்லபர்களல்லவா?

இந்த ஸ்வாமியின் திருவுருவப்படத்தை வெளியிட்டு அடியேனுள்ளத்திலுள்ளதை யெல்லாம் கொட்ட வேணுமென்று மிகுந்த பாரிப்புள்ளது. இத்யலமிதாநீம்.

2. **ஸ்ரீமதுபயவே. ராவ்ஸாஹிப். S. ராகவையங்கார் ஸ்வாமி, சென்னை.** (இந்த ஸ்வாமி 10—8—65ல் ஒரு ஸ்ரீமுகம் ஸாதித்து "இத்துடன் அடியேன் அனுப்பியுள்ள வொரு சிறு கட்டுரை அடியேனுடைய ஆனந்தபரீவாஹமானது; இதை உலகமெல்லாம் கடாக்ஷிக்கவேணுமென்பது அடியேனுடைய அவா" என்று தெரிவித்து அருளியிருக்குங் கட்டுரைவருமாறு;) **ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகையின் சிறப்பு.**—நம்ஸ்வாமி P. B. A. ஸ்வாமியால் லோகோபகாரார்த்தமாகச் செய்யப்பட்டுவருகிற பல நூற்றுக் கணக்கான ஸேவைகளில் ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகையைப் பிரசுரிப்பதுமொன்று. 1948ஆ ஸெப்டம்பர்மீ முதலாக மாதந்தோறும் எவ்வித இடையூறுமில்லாமல் வெளிவந்து கொண்டிருப்பது இப்பத்ரிகை. இதற்குமுன்னமே ஸ்வாமியால் ஆரம்பிக்கப்பட்டு மாதந்தோறும் வெளிவந்துகொண்டிருந்த அம்ருதலஹரீபத்ரிகை சென்ற சில மாதங்களாக வெளிவராதிருப்பதன் காரணம் அடியேனுக்குத் தெரியவில்லை. அந்த பத்ரிகையையும் இந்த ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகையையும் மாதந்தோறும் வெகு ஆவலோடு எதிர்பார்த்திருந்து ஒரு அக்ஷரமும் விடாமல் ஆழ்ந்து வாசித்து அநுபவிப்பவர்களில் அடியேன் தலைவன் என்றால் இது தவறாக எண்ணத்தகாதது. ஸ்வாமியின் வைதிக மநோஹரா (ஸம்ஸ்க்ருத ஹிந்தீ) பத்ரிகையைப்பற்றியும் அடியேன் எவ்வளவோ எழுதவேண்டியதுண்டு. ஆனாலும் ப்ரக்ருதம் ஸ்ரீ ராமாநுஜனைப்பற்றி மட்டும் ஸ்வல்பம் எழுதுகிறேன். இப்பத்ரிகையின் மூலமாக வியாக்கியான ரூபமாகவும் உபந்யாஸ ரூபமாகவும் தத்வார்த்த விமர்சன ரூபமாகவும் இன்னும் அனேகவிதமாகவும் வெளிவந்திருப்பவைகளைப்பற்றி அடியேன் என்னவென்று எழுதுவது. (வாசாமகோசரம்) என்றொருவார்த்தை பலரும் சொல்லுவதுண்டு; அதுதான் இதற்குப் பொருந்தும். இப்பத்ரிகையின் மூலமாக உலகம் அநுபவிக்கும் சாஸ்த்ரார்த்தங்கள் ஸகல பூர்வாசார்ய க்ரந்த ஸமூஹங்களின் ஸாரத்திரட்டு என்றால் அதிசயோக்தியாகாது. பூருவாசாரியர்களின் உபயவேதாந்த ரஹஸ்ய க்ரந்தங்களையெல்லாம் குருமுகமாகக் கேட்டுத் தரிக்க அதிகாரிகள் துர்லபர்கள். ஸ்ரீ ராமாநுஜன் பத்ரிகை யொன்றைமட்டும் விடாது வாசித்துவந்தால் ஸகல பூர்வாசார்ய க்ரந்த ஸாரார்த்தங்களையெல்லாம் அநுபவித்ததாகுமென்றால் இதில் யாருக்கு என்ன ஆக்ஷேபணையிருக்க முடியும். முக்கியமாகவொன்று; இதர பத்ரிகைகளிலோ துண்டுப் பிரசுரங்களிலோ உண்மைக்குமாறாகப் பலர் எதையாவது எழுதிவைப்பதுண்டு; அவை நம் ஸ்வாமியின் திருக்கண்களில் பட்டால் அடுத்தக்ஷணத்திலேயே அவைகளைக் கிள்ளிக்களைந்துபோடுவர் நம் ஸ்வாமி. ஒவ்வொன்றையும் ஆணித்தரமாக ஸித்தாந்தம்செய்து முடிப்பர். பிராமாணிகர்களும் அநசூயுக்களுமான ப்ராஜ்ஞர்கள் இதைத்தான் ஸித்தாந்தமென்று

ஆமோதித்து வருகிறார்கள். விவாதங்களில் நம் ஸ்வாமியின் ஸித்தாந்தம் ஒவ்வொன்றும் ஆசந்த்ரார்க்கம் விளங்கி நிலைபெற்றிருக்குமென்பது திண்ணம். ஸ்வாமியின் அற்புதமான உபந்யாஸங்களைப் பலவிடங்களில் பலமுறை நேரில் கேட்டு அநுபவித்திருக்கிறேன். அவைகளின் சிறப்பு உலகம் அறிந்த விஷயம். அப்படி நேரில் அநுபவிக்க ப்ராப்தமில்லாதவர்களுக்குப் பெரிய பொக்கிஷமாக அமைந்துவருவது ஸ்வாமியின் நூல்கள். இப்போது வெளிவந்துகொண்டிருக்கும் உபந்யாஸ சதத்வயம் அவற்றுக்கெல்லாம் சிகரமானது. ஸ்வாமியின் ஆரோக்யக் குறைவினால் ஒரு ஸம்வத்ஸரமாக உபந்யாஸம் துர்லபமான குறை தெரியாதபடி இப்படி உபந்யாஸ நூல்கள் புங்காநுபுங்கமாக வெளிவந்துகொண்டிருப்பது ஆஸ்திகஜகத்தின் பரமபாக்யமே. ஸ்வாமிக்கு விரைவில் பரிபூர்ணாரோக்யமருள வேணுமென்று தேவப்பெருமாளையும் நூற்றெட்டுத் திருப்பதியெம்பெருமான்களையும் திசை நோக்கித் தொழுது பிரார்த்தித்து நிற்கிறேன்.

S. Raghavaiangar. ... ... ... ❃

3. **ஸ்ரீமதுபயவே. T. ஆராவமுதுதாதாசாரியர் ஸ்வாமி, அட்வொகேட், கல்லக்குரிச்சி.** இந்த ஸ்வாமியின் ஸ்ரீமுகங்கள் ஒன்றிரண்டல்ல, நாலைந்துமல்ல, பத்தெட்டுமல்ல; தினப்படியாகவே கிடைத்துக்கொண்டிருக்கும். ஞாயிற்றுக்கிழமைகளிலும் Express Delivery கிடைக்கத் தவறாது. இந்த ஸ்வாமி மூன்று நான்கு ஸம்வத்ஸரமாகத் திருமாளிகையைவிட்டு அசையாமல் விச்ராந்தி கொண்டிருக்கிறார். இரவும் பகலும் இடைவீடின்றிப் புஸ்தகாவலோகனமே போதுபோக்காகவிருக்கிறார். இவர் செய்து போருகிற புஸ்தகாவலோகனம் மற்றையோர் செய்கிறவிதமாகவன்று. ஒவ்வொன்றிலும் ஆழ்ந்த ஆராய்ச்சிகளை இவர் செய்யுந்திறன் அற்புதமாயிருக்கும். மேலே ப்ரஸ்தாவித்த ஸ்ரீமத் (ராவ்ஸாஹிப்) S. ராகவையங்கார் ஸ்வாமியின் உழைப்பையும் இந்த ஸ்வாமியின் உழைப்பையும் துலாக்கோலிலிட்டு நிறுத்தால் ஸமதுலையாகத்தான் காணும். மிக முதிர்ந்த பிராயத்திலுள்ளவிவர்களின் தினசரி அடியேனுக்கு ஆச்சரியமாகவேயுள்ளது. “சோகக்ஷோபே ச ஹ்ருதயம் ப்ரலாபைரேவ தார்யதே” என்ற பவபூதிபாஷிதத்தில் சோகபதம் ஹர்ஷத்திற்கு முபலக்ஷண மென்னத் தட்டில்லை. சோகே ப்ரலாபம்போலே ஹர்ஷே ப்ரலாபமும் அவர்ஜநீயமாகையாலே ஏதோ பிதற்றினபடி. இதுநிற்க. ப்ரக்ருதம் T. A. தாதாசார்ய ஸ்வாமியின் அபிநந்தன ஸ்ரீ முகங்களையெல்லாம் வெளியிடுவதானால் நூறு பக்கங்களுக்கு மேலாகுமென்பதில் ஐயமில்லை. கடைசியாக 12-8-65ல் கிடைத்த ஸ்ரீ முகத்திலிருந்து மட்டும், அதிலும் சில வார்த்தைகளை மட்டும் இங்குப் பிரசுரிக்கிறேன்.

“அடியேனுக்கு ஏற்கெனவே தேவரீருடைய திவ்ய ஸ்ரீ ஸூக்திகளே *ஓவாதவூணாகவுண்* என்று நம்மாழ்வாரருளிச் செய்தபடியே நிரந்தர போஜனமாக இருந்தாலும், இப்போது ஸ்ரீ ராமாநுஜன் 199 - 202 மூலமாகக் கிடைத்து வருகிற உபந்யாஸமாலைகள் அம்ருதாசனமாகவிருப்பதை என்னவென்று எழுதுவேன். நம்மாழ்வார் *எனக்குத் தேனே பாலே கன்னலே யமுதே* என்று அடிக்கடி வாய் வெருவுகிறார். ஸ்ரீமதுரகவிகள் *அண்ணிக்குமமுதூறுமென்னாவுக்கே* என்கிறார். இப்படி பல மஹான்கள் பலவிதமாகப் பேசிக் களிக்கிறார்கள். அவர்களுக்கு இந்த வுபந்யாஸமாலை கிடைத்தால் என்னபாடுபடுவர்களென்று ஊஹிக்கவும் முடிய

வில்லை. இவற்றுக்கு மேலாகத் தேனும் பாலும் நெய்யும் கன்னலுமமுதுமிருப்பதாக யாரும் நினையார்களென்று சபதம் செய்வேன். முக்கியமாக அஹோபிலத்தையும் ஸ்ரீமதஹோபில ஸ்வாமியையுமே திசை நோக்கித் தொழுது போற்றுகின்றேன். அந்தஸ்வாமி ஆஹ்வாந பத்ரிகையில் "இந்த ஸந்தர்ப்பத்தில் அனேக வித்வான்களின் உபந்யாஸங்களும் வாக்யார்த்தங் களும் நடைபெறும்" என்று ப்ரதி வருஷமும் அச்சிடுவது போல் அச்சிட்டிருந்தால் தேவரீருடைய இவ்வுபந்யாஸமாலைகள் இந்த ரீதியாக வெளிவரு வதற்கு ப்ரஸக்தியிராதே; தவிரவும் அந்த ஆஹ்வாந பத்ரிகையை இரண்டொரு வாரங்களுக்கு முன்னதாக வெளியிட்டிருந்தாலும், அல்லது தேவரீருக்கு அந்த பத்ரிகை அனுப்பப்படாமலிருந்தாலும் உலகுக்கு இந்த மஹாபாக்யம் கிடைக்க ப்ராப்தி யில்லாமலன்றோ போகும். "பங்கோருபரி யதி கங்கா நிபததி' என்கிற ஸ்ரீ ஸூக்தியைப் பார்க்கும்போது இது அஸம்பா விதோக்தியல்லவா வென்று நினைக்கும்படியிருக்கும். அது இப்போது ப்ரத்யக்ஷ மாக ஸம்பாவிதமாய் விட்டதே. என்னைப் போன்ற பல பங்குக்களின் தலைமே லன்றோ தேவரீருடைய உபந்யாஸ கங்காப்ரவாஹ நிபதநம் ஓயாது நடைபெறு கின்றது. .................. பர்த்ருஹரிகவி "போத்தாரோ மத்ஸரக்ரஸ்தா:" என்று சொல்லிவைத்தான். அது வேதவாக்குப் போலே பெரும்பாலும் பலித்து வருகின்றது. எப்படியும் குறிப்பிட்ட காலத்தில் அஹோபில க்ஷேத்ரத்தில் பல வித்வான்கள் கூடுவர்கள். உபந்யாஸகர்களாக நிர்தேசிக்கப்பட்ட வித்வான் களுங்கூடி தங்கள் தங்களுக்குக் குறிப்பிடப்பட்ட உபந்யாஸங்களைச் செய்யவே போகிறார்கள். அவர்கள் மேலே குறித்த (போத்தாரோ மத்ஸரக்ரஸ்தா:) என்கிற ஸுபாஷிதத்திற்கு இலக்காகாமல் இந்த வுபந்யாஸங்களையே ஸதஸ்ஸில் வாசிப்பரேல், அல்லது இவ்வுபந்யாஸமாலையைக் கையில் கொண்டு இதற்கு வியாக்கியானமாகப் பேசுவரேல் உபந்யாஸகர்களின் ப்ராமாணிகத்வம் பொலியும், ஸதஸ்ஸூம் சோபிக்கும். தேவரீர் விவரித்துள்ள ஸ்ரீ பாஷ்ய சர்ச்சைகள் பதினெட்டை விட்டிட்டு வேறு விதமான ஸ்ரீ பாஷ்ய சர்ச்சைகளைச் செய்யலாம். ஸ்ரீ பாஷ்யம் பெரிய ஸமுத்ரமாகையால் அதில் எந்தத்துறையிலுமிறங்கலாம். உபந்யாஸங்கள் முப்பத்தாறும் நிர்திஷ்ட விஷயங்களாய் விட்டபடியால் அந்தந்த விஷயங்களை வேறு விதமாக வுபந்யஸித்துக் கீர்த்தி பெறுவர்களென்று எனக்குத் தோன்றவில்லை. நிற்க. இவ்வுபந்யாஸமாலையில் பதினேழாவதான "நிரவத்ய வித்யா ப்ரபாவோபந்யாஸம்" (பக்கம் 20) என்பதை அடியேன் அடிக்கடி வாசித்துப் புலகாங்கிதனாகிறேன். அதில் "நீறுபூத்தநெருப்பு என்னலாம்படியுள்ளவர்" என்கிற யதார்த்தோக்தியை அடியேன் மிகவும் ரஸிக்கிறேன். தேவரீருக்குப் பல அதிசயங்கள் வாய்த்தது ஆச்சரியமன்று. இப்பேர்ப்பட்ட ஜாமாதா வாய்த்ததுதான் தேவரீருடைய ஸகலாதிசயங்களுக்கும் மணங்கொடுப்பதென்று அடியேன் மட்டுமல்லாமல் பலருஞ் சொல்லக் கேட்டிருக்கிறேன். ஆனாலும் *அஹம் வேத்மி மஹாத்மாநம். அஹமேவ வேத்மி தம் மஹாத்மாநம்.



ஆண்டாள் ரங்கமன்னார்

**தாஸன் T. ஆராவமுதுதாதாசாரி**, கல்லக்குறிச்சி. 11—8—65

## 85. விசிஷ்டாத்வைதவைபவோபந்யாஸம்.

உலகில் பிரசாரத்திலிருந்து வரும் பலவகைப்பட்ட மதங்களுள் பரமபவித்திரமான விசிஷ்டாத்வைததர்சநம் மிகச் சிறந்து விளங்குகின்றது. ப்ரமாணம், ப்ரமாதா, ப்ரமேயம் என்ற மூன்று வகுப்புகளும் நம் தர்சனத்தில்தான் சீர்மை பெற்று விளங்குவன. (1) திருவாய்மொழியின் உபக்ரமத்தில் *சுடர்மிகு சுருதியென்று ஆழ்வாரால் கொண்டாடப்பட்ட வேதமே நமக்கு ப்ரமாணங்களில் தலையானது. (2) யதார்த்த ஜ்ஞான நிதிகளான ஸ்ரீமந் நாதமுனிகள் ஆளவந்தார் எம்பெருமானார் போல்வாரான மஹாசார்யர்களே ப்ரமாதாக்களில் தலைசிறந்து விளங்குபவர். (3) ஸகல சேதநாசேதநசரீரகனாய் ஸமஸ்தகல்யாண குணாத்மகனான ஸ்ரீமந்நாராயணனே பரதத்துவமென்றும், அவனுடைய திருவடித் தாமரைகளில் பண்ணும் ப்ரபத்தியே பரமஹிதமென்றும், *நலமந்தமில்லதோர் நாட்டிலே நித்யாநந்தமயமான நித்ய கைங்கர்யமே பரமபுருஷார்த்தமென்றும் இங்ஙனே கூறப்படும் அர்த்த விசேஷங்களே ப்ரமேய ச்ரேஷ்டங்களாக விளங்குகின்றன. ஆக இத்தகைய ப்ரமாண ப்ரமாத்ரு ப்ரமேய வைசிஷ்ட்யமே நம்முடைய தர்சனத்தின் சிறப்புக்கு ஹேதுவாகாநின்றது. இதிஹாஸ புராணாதிகளான உபப்ர்ம்ஹணங்களோடும் ஆழ்வாரருளிச் செயல்களோடும் கூடின வேதம் நமக்குப் பரம ப்ரமாணம். பரமவைதிகர்களென்கிற ஏற்றம் நமக்கே உரியது. உபய வேதாந்தப்ரவர்த்தகத்வமும் நமக்கே அஸாதாரணம்.

ப்ரத்யக்ஷத்தாலோ அநுமானத்தாலோ அறிய முடியாத அர்த்த விசேஷங்களை யறிவிக்கும் வாங்மயமே வேதமெனப்படும். *ப்ரத்யக்ஷேணாநுமித்யா வா யஸ்தூபாயோ ந புத்த்யதே. யத் தம் விதந்தி வேதேந தஸ்மாத் வேதஸ்ய வேததா.* என்கிற ப்ரமாணம் இங்கே அநுஸந்தேயம். வேதத்தை ப்ரமாணமாக இசையாத சார்வாக ஜைந பௌத்தாதிகள் பாஹ்யர்களெனப்படுவர். வேதத்தைப் பரம ப்ரமாணமாக இசைந்துவைத்தும், பரப்ரஹ்மம் குணசூந்யமென்றும் அலக்ஷ்மீகமென்றும் அசரீரமென்றும் விபூதி விரஹிதமென்றும் இங்ஙனே மனம் போனபடியெல்லாம் பேசுபவர்கள் குத்ருஷ்டிகளெனப்படுவர். பாஹ்யர்களோடு குத்ருஷ்டிகளோடு ஒரு வாசியில்லை யென்றருளிச் செய்கிறார் கூரத்தாழ்வான். ஸ்ரீவைகுண்டஸ்தவத்தில் *பாஹ்யா: குத்ருஷ்டய இதி த்விதயேப்யபாரம் கோரம் தமஸ் ஸமுபயாந்தி நஹீக்ஷஸே தாந். ஜக்தஸ்ய காநநம்ருகைர் ம்ருகத்ருஷ்ணிகேப்ஸோ: காஸாரஸத்வநிஹதஸ்ய ச கோ விசேஷ:?* என்றுள்ள ச்லோகம் இங்கே அநுஸந்தேயம். பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் துல்யயோக க்ஷேமர்களென்பதற்கு ஒரு அற்புதமான த்ருஷ்டாந்தம் காட்டுகிறாரிதில்; விடாய்மிகுத்துத் தண்ணீரைத் தேடியோட இரண்டு மிருகங்கள் புறப்பட்டன. அவற்றில் ஒரு மிருகமானது தடாகத்தில் புகாதே கானலைக்கண்டு பாநீயப்ரவாஹமாக மயங்கி ஓடிக்கொண்டே யிருக்கையில் புலியின் வாயிலே விழுந்து மாண்டொழிந்தது. இது இப்படியாக, மற்றொரு மிருகமானது விடாய்தீரப் பெறுவதற்கு உண்மையாகத் தண்ணீருள்ள தடாகத்திலேயே சென்று சேர்ந்தும் துறை தப்பியிழியவே அங்குக் கிடந்த வொரு முதலையினாலே கதுவப்பட்டு மாண்டொழிந்தது. ஆக இரண்டு மிருகங்களும் தடாக ப்ரவேச அப்ரவேசங்களாலே சிறிது வைலக்ஷண்யம் பெற்றிருந்தாலும் விநாசத்தில் துல்யபலமே. அதுபோலவே குத்ருஷ்டிகளும் பாஹ்யர்களும் வேதப்ராமாண்ய அங்கீகார அநங்கீகாரங்களாலே

சிறிது வாசிபெற்றிருந்தாலும் விநாசத்திலே வாசியற்றவர்களே யென்றதாயிற்று. அந்த பாஹ்யர்களும் குத்ருஷ்டிகளும் கிடக்கட்டும். வேதக் கடலில் நாம் உள்ளபடி அவகாஹித்து அர்த்த ரத்னங்களைக் கொள்ளைகொண்டு அநுபவித்து ஆனந்திக்க பாக்கியம் பெற்றிருக்கிறோமென்று நாம் களித்திருப்போமாக. .... .... *

## 86. வேதவிபாக மீமாம்ஸாவிபாக உபந்யாஸம்.

வேதம் கர்மகாண்ட மென்றும் ப்ரஹ்மகாண்ட மென்றும் இரு வகுப்பாக வுள்ளது. பூர்வபாகம் கர்மகாண்ட மென்றும், உத்தரபாகம் ப்ரஹ்மகாண்டமென்றும் வழங்கப்படும். உபநிஷத்துக்களையே ப்ரஹ்மகாண்ட மென்பது. பகவானுக்கு ஆராதன ரூபங்களான யஜ்ஞம் முதலிய கரும விசேஷங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் கர்ம காண்ட மென்றும், அக்கருமங்களினால் ஆராதிக்கப்படுகின்ற பகவானுடைய ஸ்வரூப ரூப குணங்களை விரிவாகக் கூறும் வேதபாகம் ப்ரஹ்மகாண்ட மென்றும் சொல்லிற்றாயிற்று. இதுவே உபநிஷத்தென்கிற பெயராலும் வழங்கும். 'உப-நிஷீததி.' என்கிற வ்யுத்பத்தி கொண்டது உபநிஷத்தென்கிற பதம். பகவானுடைய அருகேயுள்ள தென்கை. * வேதைச் ச ஸர்வைரஹமேவ வேத்ய:* என்கிற கீதையின்படி கர்மகாண்டமுங்கூட பகவானை ப்ரதிபாதிக்கவல்லதேயாயினும் அந்த ப்ரதிபாதனம் வ்யவஹிதமாயிருக்கும். உபநிஷத்து அவ்யவதாநேந ப்ரதிபாதகமாயிருக்கும். கர்மகாண்டத்தில் தோன்றும் ஶங்கைகளைப் பரிஹரிப்பதற்காக ஜைமிநி யென்னும் மஹர்ஷியெழுந்து பதினாறு அத்யாயங்களோடு கூடிய ஒரு சாஸ்த்ரத்தை யியற்றினர். அதற்குப் பூர்வமீமாம்ஸையென்று பெயர். இதில் பன்னிரண்டு அத்யாயங்களே ஜைமினியால் இயற்றப்பட்டவை யென்றும் மேல் நான்கு அத்யாயங்கள் காசக்ருத்ஸ்ந மஹர்ஷியால் இயற்றப்பட்டவை யென்றும் ஒரு பக்ஷமுண்டு. இதைப் பற்றி இங்கு விசாரவிரிவு வேண்டா. *வ்ருத்திக்ரந்தே து ஜைமிந்யுபரசிததயா ஷோடஶாத்யாய்யுபாத்தா * இத்யாதியான அதிகரண ஸாராவளிச்லோகம் காண்க- "ஜைமிநீயம் ஷோடஶலக்ஷணம்" என்பது பொதுவான வார்த்தை. போதாயந வ்ருத்திக்ரந்தத்தில் பதினாறு அத்யாயங்களும் ஜைமிநிப்ரோக்தமென்று கூறப் பட்டுள்ளது. (லக்ஷணமென்று அத்யாயத்திற்குப் பெயர்.) ப்ரஹ்மகாண்ட மென்னும் உபநிஷத் பாகத்தில் தோன்றும் ஶங்கைகளைப் பரிஹரிப்பதற்காக வ்யாஸ மஹர்ஷி யெழுந்து நான்கு அத்யாயங்கள் கொண்ட வொரு ஶாஸ்த்ரத்தை இயற்றினர். அதற்கே ஶாரீரகமீமாம்ஸை யென்று பெயர். உத்தரமீமாம்ஸை யென்றும் வழங்குவர். ப்ரஹ்ம ஸூத்ரமென்பது இதனையே. ஒவ்வோரத்யாயத்திலும் நான்கு பாதங்களுள்ளன. ஆகவே பதினாறு பாதங்கள் கொண்டது ஶாரீரகமீமாம்ஸை யென்றதாயிற்று. இதில் ஒவ்வொரு விஷயத்தைப் பற்றி சர்ச்சை செய்து நிர்ணயிக்கும் பகுதிக்கு அதிகரணமென்று பெயரிடப் பட்டுள்ளது. அப்படிப்பட்ட அதிகரணங்கள் இந்த மீமாம்ஸையில் (156) நூற்றைம்பத்தாறு உள்ளன. சில அதிகரணங்களில் ஒரே ஸூத்ரமிருக்கும். பல அதிகரணங்களில் பல ஸூத்ரங்களிருக்கும். மொத்தம் ஸூத்ரங்களின் லக்கம் (545) ஐந்நூற்று நாற்பத்தைந்து என்று கணக்கிடப்பட்டிருக்கின்றது. ஆக, நான்கு அத்யாயங்களையும், பதினாறுபாதங்களையும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும் ஐந்நூற்று நாற்பத்தைந்து ஸூத்ரங்களையுங் கொண்டது ப்ரஹ்மஸூத்ர ஶாஸ்த்ரமென்றதாயிற்று. .... .... *

## 87. சாரீரகமீமாம்ஸா பாஷ்யவைலக்ஷண்யோபந்யாஸம்.

தத்வஹித புருஷார்த்தங்களை நாம் தெரிந்துகொள்வதற்கு உபநிஷத்துக்களே தஞ்சமாகும். அவ்வுபநிஷத்துக்களின் பொருள்களை ஸம்சய விபர்யமற நிஷ்கர்ஷித்து விளக்கக்கூடியது ப்ரஹ்மஸூத்ர சாஸ்த்ரமேயாதலால் வேதாந்திகளுக்கு சாரீரகமீமாம்ஸையே புகலாயிற்று. இந்த சாஸ்த்ரத்தின் பொருளை நிஷ்கர்ஷமாகவும் நிஷ்கல்மஷமாகவும் தெரிந்துகொண்டவர்களே வேதாந்திகளென்றும் ப்ரஹ்மஜ்ஞானிகளென்றும் சொல்லத் தகுதியுடையார். மஹர்ஷிகளியற்றிய ஸூத்ரங்களின் பொருளை நம்போல்வார் சிறிதும் அறியகில்லார்களாதலால் நம்போன்ற அல்பமதிகளிடத்தில் பரமகருணைகொண்ட பூருவர்கள் அந்த ஸூத்ரங்களின் அர்த்தத்தை விளக்கி பாஷ்யங்கள் இயற்றியுள்ளார்கள். த்வைதம் அத்வைதம் விசிஷ்டாத்வைதம் என மூன்று மதங்கள் உலக ப்ரஸித்தமாக வழங்குமவை. இம் மூன்று மதங்களிலும் பாஷ்யங்கள் அவதரித்துள்ளன. அத்வைத மதத்திற்காக ஸங்கராசாரிய ஸ்வாமிகள் பாஷ்யமியற்றினர். த்வைத மதத்திற்காக ஆனந்த தீர்த்த ஸ்வாமிகள் (மத்வாசார்) பாஷ்யமியற்றினர். நமது விசிஷ்டாத்வைத மதத்திற்காக பகவத் ராமாநுஜாசார்யரென்கின்ற ஸ்வாமி யெம்பெருமானர் ஸ்ரீபாஷ்யமருளிச் செய்தார்.

வட இந்தியாவில் அதிக ப்ரஸித்திபெற்றுள்ள வல்லப மதம் நிம்பார்க்க மதம் முதலிய மதங்களுக்காகவும் பாஷ்யங்கள் தோன்றியுள்ளன. சைவ மதத்திற்காக நீலகண்ட பாஷ்யம் தோன்றியுள்ளது. இப்படி மற்றும் பல பாஷ்யங்களிருந்தாலும் மதத்ரயபாஷ்ய மென்று மூன்று பாஷ்யங்களே நமது நாட்டில் குலாவப்படுகின்றன. ஸ்ரீவைஷ்ணவர்களென்றும் விசிஷ்டாத்வைதிகளென்றும் பகவத் ராமாநுஜ தர்சநஸ்தர்களென்றும் வழங்கப்படுகின்ற நமக்கு ஸ்வாமியின் ஸ்ரீபாஷ்யமே ஜீவாதுவாகும். சங்கரபாஷ்யம் மத்வபாஷ்யம் நீலகண்டபாஷ்யம் என்பவை போலல்லாமல் ஸ்ரீபாஷ்யமென்றே தோன்றியுள்ள ப்ரஸித்தி ஸ்ரீராமாநுஜபாஷ்யத்தின் ஒப்பற்ற பெருமையைப் புலப்படுத்தும். உபநிஷத்துக்களின் உண்மைப் பொருளை விளக்கி ஸூத்ரகாரருடைய உள்ளத்திற்கு ஒத்ததாக நிஷ்பக்ஷபாதமாய் நிருமிக்கப்பட்டது ஸ்ரீபாஷ்யமேயென்று மேனாட்டுப் புலவர்களும் மெச்சியுள்ளார்கள். அதுநிற்க: ஸ்வாமி ஸ்ரீபாஷ்யமருளிச் செய்யத் தொடங்கும் போதே "பகவத்போதாயநக்ருதாம் விஸ்தீர்ணாம் ப்ரஹ்மஸூத்ரவ்ருத்திம் பூர்வாசார்யாஸ் ஸஞ்சிக்ஷிபு꞉; தந்மதாநுஸாரேண ஸூத்ராக்ஷராணி வ்யாக்க்யாஸ்யந்தே" என்று [முன்னோர் மொழிந்த முறை தப்பாமே வியாக்கியானிப்பதாக] அருளிச்செய்திருப்பதனால் ஸ்ரீபாஷ்யத்தின் ப்ராமாணிகத்வம் அசைக்கமுடியாது விளங்குகின்றது. இக்காலத்து அஸூயுக்கள் சிலர் மேலே உதாஹரித்த பங்க்தியின் மேல் வீணான விவாதத்தைக் கிளப்பிப் பங்கமடைந்துபோனார்களென்பது நம்முடைய சதபூஷணீ வஜ்ரகுடார — தத்விஜயத்வஜ — சாங்கரசிரோபூஷா — தத்விபூஷணாதிக்ரந்தங்களினால் விசதமாதலால் அதனை ஈண்டு விவரித்துரைக்கின்றிலோம். ஆர்ஷவ்யாக்க்யாநகவசிதமாயும் அதிப்ராசீநமாயும் பரமபவித்ரமாயுமுள்ளது விசிஷ்டாத்வைதமேயென்றும், அதை நிலைநாட்டவல்ல பாஷ்யம் ஸ்ரீபாஷ்யமேயென்றும் ப்ராமாணிக வைதிகோத்தமர்களின் கொள்கை. ... ... ... *

## 88. சதுரோக்திவிந்யாஸ உபந்யாஸம்.

அலங்காரசாஸ்த்ரத்தில் பர்யாயோக்தமென்பது ஓர் அலங்காரம். இதற்கு லக்ஷணம் "பர்யாயோக்தம் து கம்யஸ்ய வசோ பங்க்யந்தராச்ரயம்" எனப்பட்டது. உள்ளபடி தெரிவிக்கவேண்டிய விஷயத்தை நேராகத் தெரிவியாதே வேறொரு பங்கியாலே தெரிவிப்பது பர்யாயோக்தாலங்காரமென்கை. இதற்கு உதாஹரண மென்னவென்றால் "நமஸ் தஸ்மை க்ருதௌ யேந முதா ராஹுவதூகுசௌ" என்பது. ராஹுவின் மனைவியினுடைய ஸ்தனங்களைப் பழுதாக்கினவர் எவரோ அவர் பொருட்டு நமஸ்காரம் என்பது இதன் பொருள். ராஹுவின் தலையைமட்டும் நிறுத்திக் கழுத்தின் கீழ்ப்பாகத்தை இல்லையாக்கினபடியாலே அந்த ராஹுவான வன் பத்னீஸ்தநக்ரஹணம் பண்ணுவதற்கு ப்ரஸக்தியில்லையாயிற்று. அதனால் அந்த ஸ்தனங்கள் வியர்த்தமாயின. ஆக, ராஹுவதூஸ்தனங்களை வியர்த்த மாக்கினவர்க்கு நமஸ்காரமென்றவிதனால் ராஹுவின் உடலை யொழித்தவர் என்னும் பொருள் தேறிற்று. இதை ருஜுவாகச் சொல்லுவதில் சமத்கார விசேஷ மில்லையென்று கருதி வேறு பங்கியாலே பேசினது ஓர் அலங்காரமாயிற்று.

இங்ஙனே பேசும் முறை வடமொழி நூற்களிலும் தென்மொழி நூற்களிலும் விசேஷமாகவுண்டு. இதேவிதமாகப் பேசுவதும் இதைப்போன்ற வேறு சில வகைகளிற் பேசுவதும் சமத்கார விசேஷசாலியான உக்தியெனப்படும். இத்தகைய உக்திவிந்யாஸம் திவ்யப்ரபந்தங்களிலுமுண்டு. ஒன்றிரண்டு காட்டுகின்றேனிங்கு. * கைவளை கொள்வது தக்கதே * என்றும் * என்னுடைய கழல்வளையைத் தாமும் கழல்வளையேயாக்கினரே * என்றும் இத்தகைய பாசுரங்கள் திவ்யப் பிரபந்தங் களில் விசேஷமாகக் காணப்படுகின்றன. தலைவியின் கைவளையை எம்பெருமான் கவர்ந்து சென்றானென்று தாய் சொல்லுவதும், அந்தோ! என்வளையை யிழந்தேனே யென்று தலைவி வருந்திச் சொல்லுவதுமாகவுள்ளது. ஆழ்வார்களின் திருக்கையில் வளை அணிந்திருப்பதுமில்லை; அதை எம்பெருமான் கொண்டதுமில்லை, இவர்கள் அதனை யிழந்ததுமில்லை. ஆண்டாள் பெண்ணாய்ப் பிறந்தவளாகையாலே அவள் வளையணிந்துகொள்ள ப்ரஸக்தியுண்டாதலால் அவள் * என்சங்கிழக்கும் வழக் குண்டே * என்றும் * என்னுடைய கழல்வளையைத் தாமும் கழல்வளையே யாக்கி னரே * என்றும் * என்னுடைய பெய்வளைமேல் இச்சையுடையரேல் இத்தெருவே போதாரே * என்றும் சொல்லுவது ஒருவாறு பொருந்துமென்று கொள்ளலாம். ஆண்பிள்ளைகளான ஆழ்வார்கள் * பரதர் விலை கொண்டுதந்த சங்கமிவை * (திருவிருத்தம்) என்றும் * ஓ! தண்ணீர்க்கண்ணபுரம் தொழுதாளிவள் கன்னியோ? கைவளை கொள்வது தக்கதே!* என்று மிங்ஙனே பாசுரங்களருளிச் செய்ய ப்ரஸக்தி யில்லையே! என்று சங்கை தோன்றும். இது, முன்னம் ப்ரஸ்தாவித்த பர்யாயோக் தாலங்கார வகையிற் சொன்னதத்தனை. அதாவது, எம்பெருமானைப் பிரிந்ததனா லுண்டான அவஸாதத்தினால் மேனி மெலிந்து போயிற்று; மிகவும் க்ருசமாய் விட்டது என்ன வேண்டுவதற்குப் பர்யாயமாக வளையிழந்ததாகவும் வளை கழன் றொழிந்ததாகவும் வளையைஎம்பெருமான் கொள்ளைகொண்டதாகவும் சொல்லுகிறதித் தனை, மேனி மெலிந்தால் கையில் வளை தங்காதென்பது அனைவருமறிந்ததேயன்றோ.

வடமொழியில் ஒரு கவி சொல்லுகிறான் - "யாமி நயாமீதி தவே வததி புரஸ்தாத் க்ஷணேந தந்வங்க்யா:, களிதாநி புரோவலயாநி அபராணி புநஸ் ததைவ தளிதாநி." என்று. (இதன் கருத்தாவது) ஒரு காதலன் காதலியை விட்டு தேசாந்தரம் செல்லக் கருதி (யாமி) என்றானும். புறப்பட்டுப் போகிறேனென்றபடி. காதலி ஒரு பத்து வளைகள் கையிலணிந்து கொண்டிருந்தாள். காதலன் போகிறேனென்று சொன்னவார்த்தை செவிப்பட்டவுடனே (உடல் இளைத்துப் போய்) வளைகள் கழன்று விழத் தொடங்கி நாலைந்து வளைகள் கழன்றே போயின. இந்த நிலைமையைக் கண்ட காதலன் இவளை நாம் பிரிந்து போகத்தகாதென்று கொண்டு உடனே (நயாமி) என்றான். இதற்கு இருவகைப்பொருள்; நங்காய்! நான் போவதில்லை என்றும், போவதா யிருந்தால் உன்னையும் கூடவே யழைத்துப் போகிறேனென்றும் பொருள்பட (நயாமி) என்றான். (ந, யாமி) என்று பிரித்தால் போவதில்லை யென்றாம். (நயாமி) என்று ஒரே பதமாகக் கொண்டால் உன்னையு மழைத்துப் போகிறே னென்றதாம். காதலி இது கேட்டவுடனே (உடல் தடிக்கப் பெற்றதனாலே) மிச்சப்பட்டிருந்த வளைகள் படீல் படீலென்று வெடித்துப் போயினவாம். ஆக, இதனால் மேனி மெலிந்ததாகச் சொல்ல வேண்டுமிடத்து வளை கழன்றதாகச் சொல்லப்படுகிறதென்று கொள்ளக்கடவது. இது பர்யாயோக்தமென்கிற அலங்காரத்தின்பாற்படு மென்க. .... *

## 89. உயரன்பர் உயிர்நண்பர் என்பாரைப்பற்றிய வுபந்யாஸம்

திருக்குறளில் "முகநக நட்பது நட்பன்று, நெஞ்சத்தகநக நட்பது நட்பு" என்பது ஒரு சிறந்த குறள். இதன் கருத்து யாதெனில், முகம் சிரிக்கும்படியாக நேசிப்பது நேசமன்று; நெஞ்சு குளிரும்படி நேசிப்பதே நேசம் என்பதாம். தேனொழுகப் பேசிவிட்டு நெஞ்சில் கனிவின்றி யிருப்பார் பலரை எங்கும் பார்த்து வருகிறோம். உள்ளும் புறமும் ஒத்த அன்புடையாரைக் காண்பது அரிது அரிது மிகவரிது. இராமன் கதையில் குகனைப்பற்றியும், கண்ணன் கதையில் அக்ரூரரைப்பற்றியும் முனிவர்கள் பேசியிருப்பவை நெஞ்சை யுருக்குவன. குகப்பெருமாள் இராமனை முன்னம் கண்டறியாதவர். அக்ரூரர் கண்ணனை முன்பு கண்டறியாதவர். இவ்விருவரையும் பக்தர்களென்பதா? நேசர்களென்பதா? என்றால் எம்பெருமான் திருவுள்ளத்தால் நேயர்களாகவே கொள்ளப்பட்டார்களிவர்கள். திருவடியென்று சிறப்பித்துக்கூறப்படும் அனுமன் அசோகவனத்தில் சீதாபிராட்டியைக் கண்டு அடையாளங்கள் கூறுமிடத்து "வாரணிந்த முலை மடவாய்! வைதேவீ விண்ணப்பம், தேரணிந்த வயோத்தியர் கோன் பெருந்தேவீ! கேட்டருளாய், கூரணிந்த வேல்வலவன் குகனோடுங் கங்கை தன்னில், சீரணிந்த தோழமை கொண்டதுமோரடையாளம்" என்று கூறியதாகப் பெரியாழ்வார் அருளிச்செய்கின்றார். "குகன் இராமபிரானது அனுக்கிரகத்தைப் பெற்றான், அருளைப்பெற்றான்" என்னாதே தோழமை கொண்டதாகவும், அதிலும் சீரணிந்த தோழமை கொண்டதாகவும் கூறினது குறிக்கொள்ளத்தக்கது. அக்ரூரன் கம்ஸனுடைய பணிவிடைக்காரர்களில் ஒருவனாயிருந்தான். திருத்துழாய் நறுமணத்துடனே முளைப்பதுபோல இவன் ஸ்ரீக்ருஷ்ணபக்தியோடு கூடவே

பிறந்தவன். இவன் க்ருஷ்ணபக்தனென்பதைக் கம்ஸனறியான். அறியாமையினாலே தன்னுடைய வில்விழவுக்காக கோகுலத்திற்குச் சென்று கண்ணனையும் பலராமனையும் அழைத்துவருமாறு இவனுக்குக் கட்டளையிட்டான் கடிய கஞ்சன்.



உயர்திருவாளர்கள் : (1) M. ஏகாம்பர முதலியார். (2) S. அண்ணாமலை. (3) R. நாராயணன். (4) V. N. தேவநாதன்.

அக்ரூரன் கண்ணனைப் பார்த்தவனல்லன், கண்ணன் அக்ரூரனைக் கண்டவனல்லன். ஆனாலும் "ஆக்யாதி ஹ்ருதயம் ஹ்ருதா" என்று ஸ்ரீராமாயணத்திற் கூறிய

கட்டளையிலே இருவருடைய அன்பையும் இருவருடைய நெஞ்சே அறியுமத்தனை. அக்ரூரன் திருவாய்ப்பாடியிற் சென்று கண்ணனைக் கண்டு வேரற்ற மரம்போலே விழுந்தவாறே நிகழ்ந்த நிகழ்ச்சியைக் கூறுகின்ற பராசர முனிவர் "ஸம்ஸ்ப்ருச்ய ஆக்ருஷ்ய ச ப்ரீத்யா ஸுகாடம் பரிஷஸ்வஜே" என்கிறார். [ஸம்ஸ்ப்ருச்ய] அக்ரூரனைக் கண்ணன் திருக்கரத்தால் தொட்டான் அவனெழுந்திருப்பதற்காக. திருக்கரம் பட்டவுடனே "நீசனேன் நிறையொன்றுமிலேன்—அம்மானுழிப் பிரானவன் எவ்விடத்தான் யானார்!" என்று பதறி யெழுந்து ஓடத்தொடங்கினான். [ஆக்ருஷ்ய] அக்ரூரன் ஓடவும் கண்ணன் பற்றியிழுக்கவுமாயிற்று. முடிவாக என்னாயிற்று? [ஸுகாடம் பரிஷஸ்வஜே] ஈருடல் ஓருடலென்னலாம் படியாயிற்று. பரமபக்தர்கள் பெறும் பரிசு இதுவன்றோ.

வடமொழியில் ஒரு மஹாகவி சொன்னான்; "ஸௌஹார்த ஸ்வர்ண ரேகாணா உச்சாவச பிதாஜுஷ:, பரோக்ஷமிதி கோப்யஸ்தி பரீக்ஷாநிகஷோபல:" என்று. இதன் பொருளாவது—நேசம் என்பது ஒரு தங்கக்கட்டி. தங்கத்தை உரைகல்லிலே யுரைத்துப் பார்த்து மாற்றறியுமாபோலே நேசமாகிற தங்கக்கட்டியையும் உரைத்துப் பார்க்க ஓர் உரைகல்லுண்டு; அதாகிறது பரோக்ஷமென்பது. ப்ரத்யக்ஷத்திற் போலவே பரோக்ஷத்திலும் அன்புகாட்டுமவர்களே ஸுஹ்ருத்துக்க ளென்றதாயிற்று. என்னுடைய வாழ்நாளில் இத்தகைய ஸுஹ்ருத்துக்கள் எம்பெருமானருளால் பல நாடுகளில் பலர் வாய்த்ததுண்டு. தற்காலம் நால்வரைப் பற்றித் தெரிவிக்கிறேன். அந்நால்வரை இங்கே உருவப்படத்தில் காண்கிறீர்கள். இந்நால்வரும் சென்னை மாநகரில் ஜியார்ஜ்டவுனில் தனித்தனியாக வாழும் வியாபாரிகள். இவர்களுடைய அன்பையும் ஆதரவையும் பற்றி யெழுதப்புக்கால், திருமங்கையாழ்வார் பெரியதிருமடலில் "பன்னியுரைக்குங்கால் பாரதமாம்" என்றருளிச் செய்தபடியேயாகுமத்தனை. நால்வரில் ஒவ்வொருவரும் வியாபாரமுறையில் பெருமை வாய்ந்தவர்கள். அன்பெனுங் கடலைக் கரைகண்டவர்கள். பெரியதிருவந்தாதியில் நம்மாழ்வார் எம்பெருமானை நோக்கி "ஒன்றுண்டு செங்கண்மால் யானுரைப்பது, உன்னடியார்க்கு என்செய்வ னென்றே யிருத்தி நீ" என்றருளிச் செய்கிறார். அதுபோல "என் செய்வோம்! என் செய்தோம்!' என்று நெஞ்சு குறைபட்டே யிருப்பவர்கள் இந்நால்வரும். அலங்காரநூலில் அதிசயோக்திபோலவே ஸ்வபாவோக்தி யென்னு மலங்காரமுமுள்ளது. இங்கு நாம் எழுதிற்றித்தனையும் ஸ்வபாவோக்தியே. இயல்பு நவிற்சியணி யென்பர் தமிழர். இவர்கள் சதிராக நீடூழி வாழ்ந்திடுக. .... *

## 90. வியாஸ வால்மீகி ஸம்வாதோபந்யாஸம்.

(வியாஸமுனிவரும் வான்மீகி மஹர்ஷியும் சந்தித்துப் பேசுவதாக வைத்த வுபந்யாஸம்)

வியாஸர் :—வான்மீகி முனிவரே! வணங்குகின்றேன்; வியாஸமுனியென்று என்னைச் சொல்லுவர்கள். தேவரீரால் ஸ்ரீராமாயண மென்கிற ஒரு இதிஹாஸ நூலே இயற்றப்பட்டது, நானோ "அஷ்டாதச புராணாநாம் கர்த்தா ஸத்யவதீஸுத:" என்கிறபடியே பதினெண் புராணங்களை இயற்றினவன். ஆனாலும் பூமண்டலத்தில்

தேவரீருடைய ஸ்ரீராமாயணத்திற்கே எங்கும் ஒப்புயர்வற்ற பெருமை பொலிகின்றது. ஒருவித்வான் என்னுடைய புராணங்களில் ஏதேனுமொன்றைப் பிரவசனம் செய்யத் தொடங்கினால் அங்கு ச்ரவணம் செய்யச் சிலரே சேருகின்றார்கள், தேவரீருடைய இதிஹாஸரத்னத்தை ப்ரவசனம் செய்யத்தொடங்கினலோ ப்ரவசனம் செய்பவர் மிதமதியாயிருந்தாலுங் கூட ச்ரோதாக்கள் திரள் திரளாகக் கூடுகின்றார்கள். தேவரீருடைய ஸ்ரீராமாயணத்திற்கு அத்தகைய சிறப்பு எதனாலென்பதை தேவரீருடைய திருவாக்கிலிருந்தே கேட்டறிய விரும்புகிறேன்.

வான்மீகி :—மஹர்ஷிகளின் திரளில் பராசர மஹர்ஷி மிகவும் மேம்பட்டவராக ப்ரஸித்தர். அவர் தேவரீருடைய திருத்தகப்பனார். அவர் தம்முடைய புராண ரத்னத்தில் (3—4—5.) "க்ருஷ்ணத்வைபாயநம் வ்யாஸம் வித்தி நாராயணம் ப்ரபும், கோஹ்யந்யோ புவி மைத்ரேய! மஹாபாரதக்ருத் பவேத்? தேந வ்யஸ்தா யதா வேதா மத்புத்ரேண மஹாத்மநா." என்று தேவரீரை மிகமிகச் சிறப்பித்துக் கூறியுள்ளார், ஆகவே தேவரீருடைய பிரபாவத்திலன்றோ உலகம் முழுவதும் வியப்புக் கொண்டுள்ளது. என்னிடத்திலோ எனது நூலிலோ என்ன அதிசயமுள்ளது? உள்ளதாக தேவரீர் திருவுள்ளம் பற்றினால் அது "புண்யைர் யசோ லப்யதே" என்கிற கணக்கில் சேரும்.

வியாஸர் :—இங்ஙனே சொல்லலாகாது. தேவரீருடைய ராமாயணத்திற்கு உண்மையில் மிக்க சிறப்பு உள்ளதுதான். அதை தினப்படி நியமபூர்வகமாகப் பாராயணத்தில் கொண்டு எங்கும் பலர் பலவித நன்மைகளைப் பெற்று வருகிறார்கள். பல பல மஹாகவிகளும் தேவரீருடைய ஸ்ரீராமாயணத்தை யடியொற்றியே காவியம் நாடகம் சம்பூ முதலானவற்றை இயற்றிப் புகழ் பெற்று வருகிறார்கள். வட இந்தியாவில் துலஸீதாஸரென்கிற பரமபக்தரும் ஆந்திர கவிச்ரேஷ்டரான தியாகராயரும் ராமாயணத்தைக் கீர்த்தனைகளாக இயற்றியே பக்த கோஷ்டியிலும் ஸங்கீத வித்வத் கோஷ்டியிலும் கீர்த்திவாய்ந்து விளங்குகின்றார்கள். தமிழ் நாட்டில் கம்பரென்கிற கவிகுலதிலகரும் கம்பராமாயண மென்கிற பெருங்காப்பியத்தை இயற்றியே உலகம் நிறைந்த புகழாளராயினர். இங்ஙனே பலவு முதாஹரிக்க வேணுமோ? கடல் சூழ்ந்த மண்ணுலகில் அங்கம் வங்கம் களிங்கம் காம்போஜம் காச்மீரம் காமரூபம் ஸௌவீரம் ஸௌராஷ்டிரம் மகதம் மாகதம் கேரளம் நேபாளம் ஓட்ரம் மலையாளம் கர்ணாடம் ஆந்திரம் திராவிடம் முதலான ஸகலநாடுகளிலும் ராமாயணத்தின் ப்ரக்க்யாதியன்றோ பிரபலமாகக் காணப்பட்டு வருகிறது. பல சொல்லியென்? "வேத வேத்யே பரேபும்ஸி ஜாதே தசரதாத்மஜே, வேத: ப்ராசேதஸாதாஸீத் ஸாக்ஷாத் ராமாயணாத்மநா." என்று ஸுப்ரஸித்தமான சுலோகம் தேவரீருடைய ஸ்ரீராமாயணத்தை வேதப்ராதுர்ப்பாவ மாகவே பேசியுள்ளதன்றோ.

வால்மீகி :—வியாஸரே! தேவரீருடைய பெருமை வேதமேறிக்கிடக்கிறதே; *ஸஹோவாச வ்யாஸ: பாராசர்ய:* என்றன்றோ தைத்திரீய ஆரண்யகத்தில் ஓதிக் கிடக்கிறது. அன்றியும் "பாரத: பஞ்சமோ வேத:" என்றும், "வேதாந் அத்யாபயாமாஸ மஹாபாரத பஞ்சமாந்" என்றும் வேதமாகவே சொல்லப்பட்ட

தாயிற்றே தேவரீருடைய பிரபந்தம். வீணுக அடியேனை எதற்காகப் புகழ்வது? உண்மையாக அடியேனிடம் ஒருவகையான பெருமையுமில்லையே.

**வியாஸர்**—ஸதாசார்ய கோஷ்டிகளில் பரிக்ரஹாதிசயத்தினு லுண்டானபெருமை தேவரீருடைய நூலுக்கல்லது வேறு எந்த நூலுக்கும் கிடையாது. மந்த்ரங்களின் பொருள்களைப்போல் தேவரீருடைய ஸ்ரீராமாயணத்தின் பொருள்களையும் ஸதாசார்ய ஸன்னிதானத்தில் நியம பூர்வகமாக க்ரஹிப்ப தென்கிற மரியாதை தொன்று தொட்டு நிகழ்வதாகக் கேள்விப்படுகிறேன். ஸர்வஜ்ஞான பகவத் ராமாநுஜரும் ஆசார்ய ஸன்னிதியில் ஒரு ஸம்வத்ஸரம் வஸித்து தேவரீருடைய ஸ்ரீராமாயணத்தின் திவ்யார்த்தங்களைக் கேட்டருளினுரென்ருல் இதனின்மிக்க பெருமையுண்டோ? மேலும் பல பல வியாக்கியானங்கள் அவதரித்திருப்பதும் மிக்க பெருமையை விளக்கு



"ஈட்டங் கண்டிடக் கூடுமேல் அதுகாணும் கண்பயனுவதே."
"குழாங்களாய் அடியீர்! உடன்கூடி நின்ருடுமினே."

கின்றது. அன்றியும் உபந்யாஸ கோஷ்டிகளில் தேவரீருடைய ஸ்ரீராமாயணத்திலிருந்து சில சுலோகங்களை யெடுத்து ரஸிகர்கள் ஆச்சரியமாக உபந்யஸித்து ஸப்யர்களை ஆனந்த பரவசர்களாக்குகின்ருர்களென்ருல் இதை விட வேறு என்ன சொல்ல வேண்டும். உள்ளதை உள்ளபடி யுரைத்தால் அதை இல்லைசெய்வது எதற்காக?

**வான்மீகி**:—அப்படியே யிருக்கட்டும். 'உம்முடைய குமாரன் ஸுந்தரன், மேதாவி, சதுரன் என்று ஒருவர் சொன்னல் பெற்றவர்க்கு உகப்புத்தானே. அது போல அடியேனும் உகப்புக் கொள்ளுகின்றேன். உண்மையில் அடியேனுடைய பிரபந்தத்திற்குப் பெருமை 'என்னுடைய க்ருதி' என்பதனுலன்று. கதாநாயகன்

ஸ்ரீராமசந்திரனை அமைந்தபடியால்தானென்று கொள்ளக்கடவது. வையவந்தவர்களும் வாழ்த்தும் படியாகவன்றோ ஸ்ரீராமசந்திரனுடைய பிரபாவமிருப்பது. காதும் மூக்கு மறுப்புண்ட சூர்ப்பணகை கரதூஷணாதிகளிடம் சென்று நிந்திக்க வேண்டியவள் "தருணௌ ரூப ஸம்பந்நௌ ஸுகுமாரௌ மஹாபலௌ, புண்டரீக விசாலாக்ஷௌ சீரக்ருஷ்ணாஜிநாம்பரௌ" என்று புகழ்ந்து பேசுகின்றாளே யல்லது 'படுபாவிகளிருவர் என்னை இப்பாடுபடுத்தினார்கள்' என்று சொல்லிற்றிலளே. தாரையும் தன் கணவனை வாலிக்கு ம்ருத்யுவாகவந்த இராமபிரானை "த்வமப்ரமேயச்ச ஜிதேந்த்ரியச்ச" இத்யாதிகளாலே துதிக்கின்றாள். மந்தோதரியும் தனக்கு வைதவ்யத்தை விளைத்த பெருமானை "தமஸ: பரமோ தாதா சங்க சக்ரகதாதர: ஸ்ரீவத்ஸவக்ஷா நித்யஸ்ரீ ரஜய்யச் சாச்வதோ த்ருவ:." இத்யாதிகள் சொல்லியேத்துகின்றாள். இராவணனுங் கூட "சத்ரோ: ப்ரக்க்யாத வீர்யஸ்ய ரஞ்ஜநீயஸ்ய விக்ரமை:" என்று கொண்டாடுகிறான். ஆகவிப்படி நிந்திக்கவேண்டியவர்களும் துதிக்கும்படியான வைபவம் வாய்ந்த இராமபிரான் கதா நாயகனாக வாய்த்ததே என்னுடைய காவியத்திற்கு ஏற்றம் விளைப்பதாயிற்று—என்ன, வியாஸரும் ஒக்கும் ஒக்கும் என்றுசொல்லித் தலைதுலுக்கிப்போனார் மற்றொருநாள் வருகிறேனென்று சொல்லி.

## 91. ப்ரமாணப்ராபல்யோபந்யாஸம்—வேதச் சிறப்பு.

ஸாராஸாரங்கள் கலந்த கட்டியாயிருக்கு மிந்நிலவுலகில் அஸாரங்களையும் அல்பஸாரங்களையும் தள்ளி ஸாரங்களைக் கொள்வோமாயின் அவை பிரமாணங்களின் திரள், பிரமேயங்களின் திரள், பிரமாதாக்களின் திரள் என மூன்று வகுப்புகளிலடங்கும். யதார்த்தமான ஞானத்தைப் பிறப்பிக்கும் சாஸ்த்ரங்கள் ப்ரமாணமெனப்படும். அந்த சாஸ்த்ரங்களினின்று தேறுகின்ற அர்த்த விசேஷங்கள் ப்ரமேயமெனப்படும். மேற்சொன்ன அர்த்த விசேஷங்களைக் கண்டறிந்து உபகரிக்கவல்ல மாஞானிகள் ப்ரமாதாக்களெனப்படுவர்கள். இவற்றுள் பிரமாணங்கள் அளவுகடந்தவை. திருமங்கையாழ்வார் "கலைகளும் வேதமும் நீதிநூலும் கற்பமும் சொற்பொருள் தானும், மற்றை நிலைகளும் வானவர்க்கும் பிறர்க்கும் நீர்மையினாலருள்செய்து" என்றருளிச்செய்தபடியே எம்பெருமான் அத்வாரகமாகவும் ஸத்வாரகமாகவும் வெளியிட்டருளியுள்ள சாஸ்த்ரங்கள் அளவுகடந்தவை. ப்ரமேயங்களான அர்த்தவிசேஷங்கள் பிரமாணங்களிற்காட்டிலும் அதிகமான கணக்கில் தேறும். ஏனென்றால், மூலம் சுருங்கியிருக்கும், அர்த்தம் பெருகியிருக்கும் என்பதனால். ப்ரமாதாக்களின் ஸங்கியை குறைவாகவே யிருக்கும். இறந்தகாலத்திற் சென்றவர்கள், நிகழ்காலத்தில் விளங்குபவர்கள், எதிர்காலத்தில் தோன்றப்போகின்றவர்கள் ஆக முக்காலத்திலுள்ளாரையும் கூட்டிக்கொண்டாலும் யதார்த்தஞானமுடையவர்களாய்ப் பிரவசனம் செய்யவல்ல ப்ரமாதாக்கள் மிகக் குறைவாகவன்றோ தேறுவர்கள். அதைப்பற்றியென்ன? ஆக ப்ரமாண ப்ரமேய ப்ரமாத்ருவர்க்கங்கள் மூன்றே அஸார அல்பஸாரபூயிஷ்டமான இந்த ஜகத்தில் ஸாரமெனத்தகும். இவை உலகில் நிலவுவதனால்தான் பலவகைப்பட்ட க்ஷோபங்களினிடையே நாம் க்ஷேமத்தையும் அநுபவித்துவருகிறோம்.

மேலே விவரித்த மூன்று வர்க்கங்களில் ப்ரமாணவர்க்கந்தான் வலிது. ஏனென்றால், அஃது இல்லாதபோது ப்ரமேயவர்க்கமும் ப்ரமாத்ருவர்க்கமும் தேற மாட்டாதன்றோ. ப்ரமாணமான மூலம் இருக்கவேயன்றோ ப்ரமேயங்களான அர்த்தங்களும் அவற்றையுணர்ந்து உணர்த்தும் ப்ரமாதாக்களும் தோன்ற நேர்ந்தது. ஆதலால் ப்ரமாண வர்க்கமே மிகச் சிறந்தது. கீழே நாம் எடுத்துக்காட்டின திருமங்கையாழ்வாரருளிச்செயலின்படி ப்ரமாணங்கள் பலவகுப்பாயிருந்தாலும் *ஆதௌ வேதாः ப்ரமாணம்* என்கிற பட்டர் ஸ்ரீஸூக்தியின்படியும், *உளன் சுடர்மிகு சுருதியுள் * என்கிற ஆழ்வாரருளிச்செயலின்படியும் வேதமே தலைசிறந்த ப்ரமாணமாகும். வேதத்தை யுபஜீவித்தே மற்ற ப்ரமாணங்கள் தோன்றின; ஆகவே வேதம் ஸ்வதः ப்ரமாணமென்றும் மற்றவை பரதः ப்ரமாணமென்றும் கொள்ளப்படுகின்றது. பஞ்சராத்ரமும் வேதமும் துல்யப்ரமாணமென்றும், மற்ற இதிஹாஸ புராணாதிகள் வேதவிரோதம் காணாதவிடங்களில் ப்ரமாணமென்றும் மேலையார்களின் கொள்கை.

வேதத்தின் சிறப்பு முக்கியமாக நான்கு விஷயங்களைப் பொறுத்தது. 1. நித்யத்வம், 2. அபௌருஷேயத்வம், 3. அவிச்சிந்நபரம்பரா ப்ராப்தத்வம், 4. அநந்தத்வம் என்பவையாம் அவை. இந்நான்கையும் விவரிக்கின்றேன். முன்னம் நித்யத்வநிரூபணமாகிறது. ஸ்வரூபதோநித்யமென்றும் ப்ரவாஹதோநித்யமென்றும் நித்யவஸ்துக்கள் இருவகைப்படும். வேதமென்பது சப்தராசியாதலாலும் உச்சாரணத்தினாலேயே அதற்கு ஸ்வரூபஸித்தியாதலாலும் உச்சரிக்கப்படாதபோது அது இல்லையென்று சொல்லவேண்டி வருதலால் வேதம் ஸ்வரூபதோ நித்யமாகாது. சிலர் பலர் சிலபலவிடங்களில் உச்சரியாமலிருந்தாலும் ஆங்காங்குப் பலவிடங்களில் பலர் வேதத்தை உச்சரித்துக்கொண்டேயிருப்பர்களாதலால் ப்ரவாஹதோ நித்ய வகுப்பில் சேரும். நநு, எம்பெருமான் ஸ்ருஷ்டிகாலத்தில் ஸகல பதார்த்தங்களையும் ஸ்ருஷ்டிப்பதுபோல வேதங்களையும் ஸ்ருஷ்டிக்கிறபடியாலும், ஸ்ருஷ்டிக்குமுன்பு வேதம் இருக்கமுடியாதாகையாலும், ஒருகாலத்திலே லயமடைவதும் ஒருகாலத்திலே ஸ்ருஷ்டிக்கப்பெறுவதுமான வேதத்தை நித்யமென்று எங்ஙனே சொல்லமுடியுமென்று சங்கைதோன்றும். கேண்மின்; ஈச்வரன் வேதத்தை ஸ்ருஷ்டிக்கிறானென்பது ஒருநாளும் கிடையாது. வேதத்தை ஓதிவரும் அதிகாரிகள் பிரளயத்தில் அழிந்துபோய்விட்டாலும் ஸர்வஜ்ஞனும் ஸர்வசக்தனுமான ஈச்வரன் வேதத்தின் ஆநுபூர்வியைத் தான் ஞாபகத்தில் வைத்துக்கொண்டிருந்து "யோ ப்ரஹ்மாணம் விததாதி பூர்வம் யோ வை வேதாம்ச்ச ப்ரஹிணோதி தஸ்மை" என்கிற ச்ருதியின்படியே முன்னிருந்த ஆநுபூர்வி மாறாமல் அப்படியே நான்முகனுக்கு உபதேசிக்கிறான். ஆகவே வேத சப்தராசிகள் அநாதிநிதனமாகும். ஸ்வாமி ஸ்ரீபாஷ்யகாரர் தேவதாதிகரண ஸ்ரீபாஷ்யத்திலே "ஏததேவச வேதஸ்ய அபௌருஷேயத்வம் நித்யத்வஞ்ச; யத் பூர்வபூர்வோச்சாரணக்ரமஜநித ஸம்ஸ்காரேண தமேவ க்ரம விசேஷம் ஸ்ம்ருத்வா தேநைவ க்ரமேண உச்சார்யமாணத்வம்" என்றருளிச்செய்திருப்பது இங்கே யநுஸந்தேயம். உபாத்யாயர்கள், இரவிலே உறங்கிக் காலையிலே கண்விழித்தெழுந்த வித்யார்த்திகளுக்கு வேதமோதுவிப்பதுபோல ஈச்வரன் பிரமன்

முதலானர்க்கு வேதமோதுவிக்கிறானத்தனே. இதை ஸ்ரீபட்டர் *ஸம்ஸ்காரம் ப்ரதி ஸஞ்சரேஷு நிததத்....ஸூப்தோத்புத்த விரிஞ்சபூர்வ ஜநதாம் அத்யாப்ய* என்று சுலோகமாக்கியருளிச்செய்தார். இதனாலேயே வேதங்களுக்கு அபௌருஷேயத்வமும் நிரூபிதமாயிற்றென்று கொள்ளலாம். ஆனாலும் சிறிது விவரிக்கிறேன். உலகில் லக்ஷக்கணக்கான வாங்மயங்கள் தோன்றியிருக்கின்றன. 'இதை இன்னாரியற்றினர், இதை இன்னார் செய்தார்' என்று ஒவ்வொரு நூலுக்கும் கர்த்தாக்கள் நிர்தேசிக்கப்பட்டுள்ளார்கள்; அப்படி வேதத்திற்கு ஒரு கர்த்தாவையும் யாரும் எங்காளிலும் நிர்தேசித்ததில்லை. சிறுசிறு நூல்களுக்கெல்லாம் கர்த்தாக்கள் தெரியவரும்போது அளவுகடந்த நூலாகிய வேதங்களுக்குக் கர்த்தா உண்மையாகவொருவரிருந்தால் சொல்லாமலிருப்பர்களா? தேசிகன் *ப்ரவக்தா ச்சந்தஸாம், வக்தா பஞ்சராத்ரஸ்ய யஸ் ஸ்வயம்* என்றருளியிருப்பது ப்ரஸித்தம். பஞ்சராத்ரத்திற்கு ஸ்வயம் வக்தாவென்றும், வேதங்களுக்கு ப்ரவசநகர்த்தா என்றும் இதில் சொல்லிற்று. இதனால் ஸர்வேச்வரன் கூட வேதகர்த்தாவல்லன் என்பது விளங்கும்.



உலகப் ப்ரஸித்தரான முன்ஷீ அவர்கள் ஸம்பாஷிக்கிறார்.

பரம வைதிகர்களுங்கூட இதைப்பற்றி மனத்தில் சங்காகளங்கம் வஹித்திருக்கக்கூடும். (அதாவது) எந்த சப்தராசியும் ஒரு கர்த்தாவோ வக்தாவோ இல்லாமல் ஆவிர்ப்பவிக்க இயலாதாகையால், விஸ்தாரமான இதிஹாஸபுராணாதிகளை யெழுதிவைத்த மஹர்ஷிகள்தாமே வேதங்களையும் எழுதி வைத்திருப்பர்கள் என்று

அடியேனுங் கூட இளமையில் இங்ஙனே யெண்ணி யிருந்ததுண்டு. அடியேன் தெளிந்த விதத்தை இங்கு விஜ்ஞாபிக்கிறேன். வேதங்கள் ஒரு நூறு வருஷங்களுக்கு உட்பட்ட காலத்தில் அச்சேறி வருகின்றனவே யன்றி அதற்கு முன் இவற்றையெழுதிவைத்தவர்களுங்கூடக் கிடையாது. 'ஓலைப்படாப்ரமாணம்' என்றே இது பூருவர்களால் வழங்கப் பெற்றுள்ளது. வேதத்திற்கு ஸ்வரம் முக்கியமானது. அந்த ஸ்வர ஸந்நிவேசம் வெகு ஆச்சரியமாக அமைந்திருக்கின்றது. இந்த ஆச்சரியத்தை வேதமோதினவர்களுங்கூட ஆழ்ந்து அறிந்திலர் என்றும் சொல்லலாம். கேண்மின். வேதத்தில் பல லக்ஷக்கணக்கான பதங்கள் வருகின்றன. அவற்றுக்கு அமைந்திருக்கும் ஸ்வரங்கள் நியதங்களாய் ஓரிடத்திலும் பிறழாமலும், ஒரே பதத்திற்கு [ஸம்பந்தமோ நிபந்தமோ எதுவானாலும்] அர்த்த பேதத்தாலும் நிமித்த பேதத்தாலும் அமைந்த ஸ்வர பேதமும் ஓரிடத்திலும் பிறழாமலும் பூமண்டலம் முழுவதும் ஸமரூபமாக ஓதப்பட்டு வருவதை நோக்கினால் இது ஒரு புருஷனுடைய க்ருதிக்கு விஷயமாகக் கூடியதன்று என்பது ஸ்பஷ்டமாக விளங்கும். ஆகாசவாணி யென்று ஒன்று சொல்லுவதுண்டே அதேபோல வேதராசிகளும் ஆகாசத்திலே தோன்றிப் பரமபுருஷனால் க்ரஹிக்கப்பட்டிருக்கவேணுமே யல்லது பரம புருஷனுக்குங்கூட இந்த சப்த ஸந்தர்ப்ப ஸங்கலனம் ஸாத்யமன்று என்று அடியேன் துணிந்து கூறுவேன்.

மற்ற வேதங்கள் ஒருபுற மிருக்க; ஸாமவேதத்தின் இயல்பை நோக்குவோம். அநாதி பரம்பரை யென்பதை இதுகொண்டே அறுதியிடலாமே. உலகத்தில் ராஜாஜ்ஞை யென்பது பிரபலமாகச் சொல்லப்படுகிறது. அரசர்கள் அனைவரும் ஒன்று கூடிச் சில வாசகங்களைக் கோத்து இரண்டு மூன்று பக்கமே யெழுதிப் பிரசுரம் செய்து இதை உலகமெல்லாம் ஸமஸ்வரமாக உச்சரித்துவரவேணுமென்று கட்டளை யிட்டால் அக்கட்டளை ஒரு சிறிய க்ராமத்திலாவது இரண்டொரு நாளாவது பரிபாலிக்கப்படுமாவென்று பாருங்கள். த்வீபாந்தரங்களிலுங்கூட வியாபித்திருக்கின்ற வேத ராசிகள் உலகம் போலவே அநாதியாய் அவிச்சிந்ந பரம்பரையாய் வந்து கொண்டிருக்கின்றனவென்று இந்தப் பெருமையை யாவரும் இசைந்து தீரவேணுமே. பௌருஷேயமென்று நெஞ்சாலும் நினைக்க ப்ரஸக்தி யில்லை. அதனாலேயே வேதங்கள் மானிடர்க்கு ஸஹஜமான இருள் துயக்கு மயக்கு மறப்பு முதலான எவ்வகைக் குற்றமுமற்று விளங்கா நின்றன.

வேதங்கள் அனந்தங்களென்பது காடகச்ருதியிலுள்ள பரத்வாஜோபாக்க்யானத்தினால் விளங்கும். தேவேந்திரனருளால் முந்நூறு பிராயம் ஜீவிதம் பெற்று அந்நாட்கள் முழுதும் வேதமே யோதின பரத்வாஜமஹர்ஷி முந்நூறு வருஷகாலம் ஓதினதெல்லாம் மூன்று மலைகளாகக் காட்டப்பட்ட வேத ராசிகளில் மூன்று முஷ்டி மாத்திரமேயென்று முடிவு பெற்றுள்ளது. அந்த ப்ரகரணத்தில்தான் "அநந்தா வை வேதா:" என்றோதப்பட்டது. ஆக, நித்யமாய் அபௌருஷேயமாய் அத ஏவ நிர்தோஷகந்தமாய் அவிச்சிந்ந பரம்பரா ப்ராப்தமாய் அனந்தமாயிருக்கின்ற வேதத்தின் பெருமை வாசா மகோசரமென்று தலைக்கட்டி நிற்கிறேன். .... .*

## 92. இருபிராட்டிமார்களுக்குப் பள்ளியில் பரீக்ஷை.

ஸீதா பிராட்டியும் ஆண்டாளும் ஒரு ஸமயம் ஏக காலத்தில் ஏகஸ்தலத்தில் அவதாரம் செய்திருந்தார்கள். இருவரும் உசித காலத்தில் கல்வி கற்கப் பள்ளியில் கொண்டுவிடப்பட்டார்கள். நீங்கள் என்ன பாடம் எடுத்துக் கொள்ளுகிறீர்கள்? என்று உபாத்யாயர் கேட்க, ஸீதாபிராட்டி "நான் ஸ்ரீராமபக்தை யாகையாலே ஸ்ரீராமாயணத்தைப் பாடமாக வைத்துக் கொள்ள விரும்புகிறேனென்றாள்; ஆண்டாள் "நான் கண்ணனென்னுங் கருந்தெய்வத்தைக் காதலித்தவளாகையாலே ஸ்ரீபாகவதத்தைப் பாடமாக வைத்துக்கொள்ள விரும்புகிறேனென்றாள். அப்படியே இருவரும் பாடம் படித்து வருகிறார்கள். ஸீதா பிராட்டி ஸ்ரீராமாயணத்தில் தேர்ச்சி பெற்றாள். ஆண்டாள் ஸ்ரீபாகவதத்தில் தேர்ச்சி பெற்றாள். ஒருநாள் உபாத்யாயர் இவ்விருவரையும் பரீக்ஷிக்க விரும்பினார். இவர்களும் பரீக்ஷை கொடுக்க மிக்க ஆவல் கொண்டார்கள். உபாத்யாயர் இருவர் கையிலும் இரண்டு துண்டு காகிதத்தைக் கொடுத்து 'ஸீதே! ஸ்ரீராமபிரானிடத்தில் நீ ஸாரமாகக் கண்ட திருக்குணத்தைச் சுருக்கமாக இதில் எழுது' என்று ஸீதைக்கு நியமித்தார். அப்படியே 'கோதாய்! கண்ணபிரானிடத்தில் நீ ஸாரமாகக் கண்ட திருக்குணத்தைச் சுருக்கமாக இதில் எழுது' என்று ஆண்டாளுக்கு நியமித்தார். உடனே இருவரும் எழுதி முடித்துக் காகிதத்தை உபாத்யாயர் கையில் தந்தனர். ஸீதை யெழுதினது எட்டெழுத்து; ஆண்டாளெழுதினது ஒன்றரை யெழுத்து. 'ஏற்கெனவே நான் வெளியிட்டு உலகம் பரவியிருப்பதே யிது' என்று இருவரும் சொன்னார்கள். உபாத்யாயர் ஸீதா பிராட்டி யெழுதினதை முன்னம் வாசிக்கிறார் சரணாகதவத்ஸலஃ என்று. ஆண்டாளெழுதினதை வாசிக்கிறார் மால் என்று.

(உபாத்யாயர்) ஸீதையை நோக்கி, 'ஏற்கெனவே வெளியிட்டு உலகம் பரவியிருப்பதாகச் சொன்னாயே, எங்கே வெளியிட்டிருக்கிறாய்? அதைக் காட்டி இதன் பொருளை நீயே விவரிக்கவேணு' மென்றார்.

ஸீதை—ராவணனுக்கு நான் ஹிதோபதேசம் பண்ணினபோது "விதிதஸ் ஸ ஹி தர்மஜ்ஞஃ சரணாகதவத்ஸலஃ" என்று கூறினது உலகமெல்லாம் பரவியில்லையா? சரணாகதவத்ஸல ரென்கிற விருது அவர் தவிர வேறொருவர்க்கு ஏற்குமோ? தன்னைச் சரணமடைந்தவர்களிடத்தில் பேரன்பு காட்டுமவர் என்பது ஸாமான்யமான பொருள். சரணாகதரென்பதற்கு மநோவாக்காய சுத்தியுடன் ப்ரபத்தி பண்ணினவர்களென்று பொருளன்று. தன்னோடு உறவு கொண்டாடுமவர்களை யெல்லாம் சரணாகதராகக் கொள்பவர் அவர். ஆனதுபற்றியே நான் அடுத்தபடியாகச் சொன்னது 'தேந மைத்ரீ பவது தே' என்று. 'சரணாகத வத்ஸலோ விதிதஸ் ஸஃ' என்று கீழே சொன்னதற்குச் சேர "தமேநம் சரணம் கச்ச" என்றன்றோ அடுத்தபடியாகச் சொல்லியிருக்கவேண்டும்; அப்படி சொல்லாமல் 'தேந மைத்ரீ பவது தே' என்று நான் சொன்னது மைத்ரியும் சரணாகதியும் பர்யாய மென்று காட்டவே காணும். காலைப் பிடிக்கவேண்டா, கையைப் பிடித்தாலே போதும். கையைப் பிடித்தால் உதறிவிட்டுப் போவர்களென்றும், *அநதிக்ரமணீயம் ஹி சாணக்ரஹணமாகை

யாலே காலைப் பிடித்தால்தான் காரியமாகுமென்றும் சொல்லுவது மற்றையோர்கள் திறத்த; மூல புருஷனான நாராயணன் திறத்து. என் எஜமானரிடத்தில் அப்படி கிடையாது; எல்லாரும் தமக்குத் தோழராயிருக்கவேண்டு மென்பதே அவருடைய ஆசை. * குகனோடும் கங்கை தன்னில் சீரணிந்த தோழமை கொண்டது ப்ரஸித்த மல்லவா? * ராமஸ்ய ஆத்மஸமஸ் ஸகா * என்கிறாரே வால்மீகி.

உபாத்யாயர்—'சரணாகதவத்ஸல:' என்கிற எட்டெழுத்தில் ஸ்ரீராமாயண ஸாரத்தை நீ அடக்கிச் சொன்னது பரம ஸந்தோஷம். இனி ஆண்டாளைக் கேட்கிறேன் (என்று சொல்லிவிட்டு) கோதாய்! நீ கண்ணனுடைய திருக்குணத்தை ஸாரமாக மால் என்கிற சிறு சொல்லினால் தெரிவித்ததாகக் கூறினை; அதை எங்கே தெரிவித்திருக்கிறாய்! அதன் பொருளை நீ விவரித்துக் காட்டு, பார்ப்போம். என்றார்.

ஆண்டாள்—திருப்பாவையில் 'மாலே மணிவண்ணா' என்றேன்; அதற்கடுத்த பிரபந்தத்தில் "மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை" என்றேன். என் கணவனான கண்ணபிரானுடைய வைபவ ஸர்வஸ்வமும் மால் என்கிற ஒரு சிறு சொல்லில் அடங்கி விட்டதென்றால் மிகையாகாது. மால் என்பதற்குத் தமிழ் நிகண்டுகளில் மூன்று பொருள்களுண்டு; "மாலெனக் கருமை பெருமை மையலுமாம்" என்பது நிகண்டு. கரியன் பெரியன் என்கிற பொருள்கள் கிடக்கட்டும்; மூன்றாவதான பொருள் மையலென்பது. மையலென்றாலும் மயலென்றாலும் ஒக்கும். பைத்தியம் என்று உலகர் சொல்லுவர்களே, அதுவே வடிவெடுத்தவன். மோஹங் கொண்டவன், வியாமோஹங் கொண்டவன், பித்துக் கொள்ளி, பித்தன் என்றால் என் கணவனுக்குப் பரமானந்தம். என் மாமியாரான யசோதைப் பிராட்டி *பேய்ப் பால் முலையுண்ட பித்தனே!* என்றழைத்தால் என் கணவனுக்கு உள்ளங் குழையும். பூதத்தாழ்வார்கூட *மாலே நெடியோனே கண்ணனே!* என்று அழைத்திருக்கிறார். ஆனால் அவர் என்னுடைய மயலைத் தாம் அனுபவித்துப் பேசினவரல்லர். மால் என்னுஞ் சொல்லுக்கு மயலென்னும் பொருளுண்டென்று அவ்வாழ்வார் அறிந்திருப்பரென்று நான் நினைக்கவில்லை.



ஸ்ரீமான். வித்வந்மணி. எம்பார் கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி. ஸ்ரீரங்கம் (வைகுண்டவாஸி.)

உபாத்யாயர்—கோதாய்! அப்பரமனைப் பித்தனென்கிறாயே; நீயநுபவித்த பித்தைச் சிறிது சொல்லலாகாதா? அதைக் கேட்கிற பாக்கியமாவது எனக்கிருக்கத்

தகாதா? வழிப்போக்கர்களின் மீது கல்லையெடுத்து எறிகிறவர்களைத் தான் நாங்கள் பித்தரென்றும் பைத்தியமென்றும் கொண்டிருக்கிறோம். கண்ணனிடத்தில் நீயனுபவித்த பித்து எத்தகைத்து? சிறிது சொல்லிக் காணாய்.

ஆண்டாள்—வட மதுரையில் வந்து பிறந்தவன் பிறந்த லக்னத்திலேயே ஆயர்பாடிக்கு அணிவிளக்காக ஆனானே, இதிலேயே தெரியவில்லையா அவனுடைய பித்து. கண்ணன் அவதரித்த காரணத்தைப் பலர் பலவாறு கூறியிருக்கிறார்கள்; மற்றையோர் சொன்னதென்ன? நான் சொன்னதென்ன? என்பது உமக்குத் தெரியாதே. சொல்லுகிறேன் கேளும். என் பெரிய தகப்பனார் நம்மாழ்வார் "இன்றிவ்வாயர் குலத்தை வீடுய்யத் தோன்றிய கருமாணிக்கச்சுடர்!" என்று முன்னம் சொல்லிப் பின்னை *மண்ணின் பாரம் நீக்குதற்கே வடமதுரைப் பிறந்தான்* என்றார். என் சிறிய தகப்பனார் கலியன் *கானயன் கடிமனையில் தயிருண்டு நெய் பருக நந்தன் பெற்றவானயன்* என்று திருவாய்ப்பாடியில் கவ்யம் பாழ்போகாமே தயிர் வெண்ணெய் நெய் முதலானவற்றை வயிறாரவுண்பதற்கு வந்து பிறந்தானென்றார். நான் என்ன சொன்னேன் தெரியுமா? *கஞ்சன் வலை வைத்தவன்று காரிருளெல்லில் பிழைத்து நெஞ்சு துக்கஞ் செய்யப் போந்தாய் நின்றவிக் கன்னியரோமை* என்று என் வயிற்றெரிச்சல் தீரச் சொன்னேன். கம்ஸன் வஸுதேவ தேவகிகளை விலங்கிட்டுச் சிறையிலடைத்து நீ பிறந்த வுடனே உன்னை நலிவதாக இருக்கையில் அதற்குத் தப்பிப் பிழைத்து இச்சேரியிலே நீ வந்து சேர்ந்தது எதற்காகத் தெரியுமா?..............ஸ்வாமீ உபாத்யாயரே! மேலே சொல்ல என்னால் முடியவில்லையே. *காலுமெழா கண்ண நீரும் நில்லா உடல் சோர்ந்து நடுங்கிக் குரல்மேலுமெழா மயிர்கூச்சுமறா* என்று என் தந்தையார் பட்டபாடு படுகிறேனையா!...........என்று சொல்லிக்கொண்டே பள்ளியை விட்டு விலகி ஜய தேவருடைய கீத கோவிந்தத்தைப் பாடிக்கொண்டே செல்கின்றாள்;—

" தீர ஸமீரே யமுநாதீரே வஸதி வநே வநமாலீ
கோபீபீநபயோதர மர்த்தந நிர்த்தய கரயுகசாலீ
ச்லிஷ்யதி காமபி சும்பதி காமபி ரமயதி காமபி ராமாம்
தீர ஸமீரே யமுநாதீரே வஸதி வநே வநமாலீ ".

## 93. வேதலக்ஷணோபந்யாஸத்தின் அநுபந்தம்.

கீழே (பக்கம் 145ல்) அறுபத்தொன்பதாவது உபந்யாஸம் வேத லக்ஷணத்தைப் பற்றி விஜ்ஞாபிக்கப்பட்டு (பக்கம் 150ல்) அதை முடிக்கு மிடத்து, "பத பாடத்தில் ச்சாந்தஸவிபர்யயம் அடியோடு கிடையாதென்கிற அபூர்வ நிரூபணம் அடியேனுடைய நூல்களுக்கு ஜீவநாடியாயிருப்பதாம்; இதைப்பற்றி மேலே பிற் பகுதியில் மற்றோருபந்யாஸம் வரும்" என்றெழுதப்பட்டுள்ளது. இதைக் கண்ட வைதிகர்கள் இவ்வுபந்யாஸத்தை ஆவலோடு எதிர்பார்த்திருப்பார்களாதலால் அன்னவர்களின் த்ருப்திக்கு இவ்வநுபந்தம் இந்த முதற் பகுதியிலேயே அவதரிக்கின்றது. வேதத்தில் பதபாடத்தில் ச்சாந்தஸ விபர்யயம் கிடையாதென்கிற நிரூபணத்தை

அபூர்வமாக அடியேன் செய்யத் தொடங்கினேனென்பது ஸத்யம். இவ்வாராய்ச்சித் துறையில் இது காறும் ஒரு வைதிகரும் இறங்கினதில்லை. இறங்காததோடு இதைப் பற்றின அடியேனுடைய ஆராய்ச்சிகள் நிலை நிற்க மாட்டாதென்றும் க்ஷேபிக்கப் புகுந்தார்கள் சிலர். அவர்கள் பங்கப்பட்டு நின்றார்களென்பதும் ஜகத் விதிதம். அது நிற்க. பதபாடத்தில் ச்சாந்தஸவ்யத்யயம் அடியோடு கிடையாதென்கிற நிரூபணத்தை அடியேன் செய்யத் தொடங்கினது எதற்காக? அதனால் என்ன பலன்? என்பதை முன்னம் தெரிவிக்க வேண்டுவது மிக அவசியமாதலால் முந்துற



முன்னம் அதைத் தெரிவிக்கிறேன். சாஸ்த்ர பாண்டித்யத்தோடு விமர்ச கௌசலமு முள்ளவர்களுக்கு ஸப்தலக்ஷணாதி க்ரந்தங்களாகிற [மடக்குகள்] அநபேக்ஷிதங்க ளென்றும், பதஸ்வரூபங்களில் ஸந்தேஹ விபர்யயங்கள் ஏற்படாதபடிக்குத் தங்கள் ஞானத்தைக் கொண்டே செய்துகொள்ள முடியுமென்றும் அடியேன் வேதாத்யயந ஸர்வஸ்வத்தில் விஜ்ஞாபிக்கத் தொடங்கினேன். இந்த வார்த்தை யாரை நோக்கிச் சொன்னதென்றால், பல வருஷ காலம் குரு குலத்திலே சிரமப்பட்டு ஸம்ஹிதாத்ய யனத்தோடு நின்று விடாமல் பதக்ரமங்களையும் அதிகரித்தவர்கள் சாஸ்த்ரஜ்ஞான

ஸம்பந்நர்களுமாயிருப்பரே; அன்னவர்களை நோக்கிச் சொன்னது. வேதமோதாத கேவல வித்வான்கள் தங்களுடைய பாண்டித்யத்தைக் கொண்டு வேதத்தில் பதவிபாகம் செய்துகொள்ள முடியுமென்று அடியேன் நெஞ்சிலும் கருதினதில்லை, எழுதினதுமில்லை. அது ஸர்வாத்மநா அஸாத்யமென்பது புநருக்தம். பதபாடத்தை யோதிப் பலகால் ஆவ்ருத்தியும் செய்திருந்தும் ஸமய விசேஷங்களில் ஸந்தேஹங்கள் விளைவதுண்டாதலால், அப்படி ஸந்தேஹமே விளையாதபடி பதாத்யயந காலத்திலேயே தங்கள் பாண்டித்யத்தைக் கொண்டு க்ல்ப்தி செய்துகொள்ள முடியுமென்பதே அஸ்மத்விவக்ஷிதம். இது ஸ்வாநுபவைக ஸாக்ஷிகம்.

இதன்மேல் பிறர் பிரபலமாக வாதித்ததும் வரைந்ததும் என்னவென்றால், வேதத்தில் ச்சாந்தஸ வ்யத்யயங்கள் அளவுகடந்திருப்பதால் நம்முடைய ஞானம் லௌகிக க்ரந்தங்களில் விலை செல்லுமே யொழிய வேதத்தில் சிறிதும் விலைசெல்லாது என்பதே. இது அடியேனுடைய விவக்ஷிதத்தைச் சிறிதும் க்ரஹியாமையினாலத்தனை. ஸம்ஹிதையும் ப்ராஹ்மணமுமாகிற மூலத்தில் எத்தனையோ ஸந்தேஹங்கள் தோன்றுகின்றன. வேத மோதாதவர்களுக்கு ஒரு ஸந்தேஹமுமில்லை; வேதமோதினவர்களுக்கு ஸந்தேஹ முண்டாகாத விடமில்லை யென்றார் ஒரு விவேகி. * ஸ்வேந பாகதேயேநோப தாவதி * என்கிற வாக்யம் பரச்சதம் வருகிறது. அதற்கடுத்த வாக்யம் 'ஸஏவ, ஸைவ, தஏவ, தாஏவ, தேஏவ, தேநைவ, தஸ்மாஏவ........' என்றிப்படி பல்வேறு வகைப்படுகின்றன. ஸப்தலக்ஷணஜ்ஞ சிட்டாக்கள் இவ்விடங்களுக்கு ஏதேனும் கைகொடுப்பதுண்டோ? இல்லை. "உபோ பேந்நு மகவந்" என்றொரு வாக்யம். (உபோப, இத், நு, மகவந்) என நான்கு பதங்கள் இங்கு. (உபோபேத்யுப-உப) என்று வேஷ்டன முடையது முதல் பதம். நன்றாக வேதமோதின இருவர் வேதபாராயணம் செய்து கொண்டு போம்போது (உபோபேத்) என்றாரொருவர். மற்றொருவர் (உபோ இத்யுபோ) என்றார். மேலே (பேந்நு, நுமகவந்) என்று தாராளமாகப் பாராயணம் நடந்து செல்லுகிறது. இவர்களும் அந்த வாக்யத்தை நான்கு பதமாகவே கொண்டார்கள்; ஆனால் (உபோப, இத், நு, மகவந்) என்று கொள்ளாமல், (உபோ, பேத், நு, மகவந்) என்று கொண்டுவிட்டார்கள். இது தவறு என்று சிக்ஷிப்பதற்கு அத்யயந பரம்பரையல்லது வேறு லக்ஷண சிக்ஷை கிடையாது. எந்த ஸந்தேஹத்திற்கும் குருகுலந்தான் தஞ்சமென்பதை மறக்க வொண்ணாது, மறுக்க வொண்ணாது. மேலே விவரித்த விடங்களிலெல்லாம் ஸப்தலக்ஷணஜ்ஞ சிட்டாக்களுக்குப் பணியில்லை யென்பது சர்வித சர்வணமேயாம். அந்த லக்ஷணங்கள் எங்கெங்கு உபஜீவிக்கப்படுகின்றனவோ, அங்கெல்லாம் சாஸ்த்ரபாண்டித்யம் தாராளமாகக் கைகொடுத்தே தீரும். குருகுலக்லிஷ்டர்களான வைதிகர்களுக்கு ஸந்தேஹ முதிக்க ப்ரஸக்தியுள்ளது பதபாடத்தில்தான். அதில் ச்சாந்தஸவிபர்யய மென்பது ஈஷத்தும் கிடையாது. இதுவே அடியேனுடைய அபூர்வ நிருபணம்.

முதன் முதல் ஆரம்பமாகிய * இஷேத்வா * அநுவாகத்தில் "ஊர்ஜஸ்வதீ: பயஸ்வதீ: ப்ரஜாவதீ:" என்கிற மூன்று பதங்களும் ச்சாந்தஸ விபர்யய முள்ளவை. ஊர்ஜஸ்வத்ய:, பயஸ்வத்ய:, ப்ரஜாவத்ய: என்று ப்ரதமாபஹுவசநாந்தமாக

இருக்கவேண்டியவை த்விதீயாபஹு¬வசனாந்தமாக இருப்பது வ்யத்யயம்; இங்கே பதகாரர் என்ன செய்ய முடியும்? ஒன்றும் செய்ய முடியாதாகையாலே உள்ளது உள்ளபடியே யிருக்கிறது. வேதமோதினவர்களுக்கு இந்த ஸ்தலத்திலும் இது போன்ற பல ஸ்தலங்களிலும் எவ்விதமான ஸந்தேஹமும் உதிப்பதில்லை. ஆகவே இவ்விடங்களில் பாண்டித்யத்தையும் விவேக கௌசலத்தையும் செலுத்தவேண்டிய ப்ரஸக்தியுமில்லை. இதற்கடுத்த (*யஜ்ஞஸ்ய கோஷதஸி *) என்கிற அநுவாகத்தில் "அதித்யை ராஸ்நாஸி" என்றவிடத்தில் (அதித்யா:) என்றிருக்க வேண்டுவது (அதித்யை) என்றிருப்பது ச்சாந்தஸ வ்யத்யயம். உடனே (இந்த்ராண்யாஸ் ஸந்நஹநம்) என்றிருக்க வேண்டுவது (இந்த்ராண்யை ஸந்நஹநம்) என்றிருப்பதும் வ்யத்யயம். இவ்விடங்களிலும் பதகாரர் ஒன்றும் செய்ய இயலாது; வேதமோதினவர்களுக்கு ஸந்தேஹப்ரஸக்தியுமில்லை யிங்கு; ஆகவே பாண்டித்யம் விலை செல்ல வேண்டியது மில்லை யிங்கு.

இன்னமும் பார்க்க; (விச்வேபிர் தேவேபிர் தேவதயா) என்று ஓரிடம். இங்கு (விச்வேபி:) என்றதும் ச்சாந்தஸம்; (தேவேபி:) என்றதும் ச்சாந்தஸம். ஆனல் அத்யேதாக்களுக்கு இங்கு யாதொரு ஸந்தேஹ ப்ரஸக்தியும் கிடையாது. இங்கு பண்டிதர்கள் தங்கள் பாண்டித்யத்தைச் செலுத்த வேண்டிய ஆவச்ய கதையுமில்லை. மற்றோரிடம் பாருங்கள்; (ப்ர்திவ்யை தேவயஜந்யை வ்ரஜம் கச்ச) என்றோரிடம். இங்கு எந்த பதத்திலாவது ஸந்தேஹமுண்டோ? எதிலுங் கிடையாது. உடனே (ப்ர்திவ்யா அதேவயஜநோ வ்ரஜம் கச்ச) என வருகிறது. இங்கு ப்ர்திவ்யை பதமா? ப்ர்திவ்யா: பதமா?' என்கிற ஸந்தேஹம் உண்டாகியே தீரும். மடக்கு என்று நாம் பெயரிட்டிருக்கிற லக்ஷண க்ரந்தங்களைக் கட்டிவைத்திட்டு விமர்சிப்போம். இந்த கெட்டத்தில் (ப்ர்திவ்யை) என்று நிஸ்ஸந்தேஹமாய் சதுர்த்தீவிபக்த்யந்தமாய் இரண்டு தடவை வந்திருப்பதால் அந்த வழியைப் பின்பற்றி (ப்ர்திவ்யா அதேவயஜந:) என்றவிடத்திலும் (ப்ர்திவ்யை) என்றுதான் பதம்பிரிக்கவேணும். ஆனல் பதபாடம் அப்படியில்லை; (ப்ர்திவ்யா:) என்று வேறு விபக்தியாகத் தானுள்ளது. ஏனிப்படி? என்று விமர்சித்தேயாக வேண்டும். இப்படி பல நூறிடங்கள் வருகின்றன. மேலே இன்னுஞ் சிலவிடங்களையும் எடுத்துக் காட்டுவேன். விவேகிகள் விமர்சித்தேயாக வேண்டுமிடங்கள் இவை. ஆனல் இதுகாறும் ஒரு வைதிக வித்வானும் விமர்சித்த தில்லை. விமர்சிக்கப் புகுந்தவன் அடியேனொருவனே யென்பது அவலேபோக்தி யானாலும் சொல்லித் தீரவேண்டியதாகிறது. விமர்ச பலனை விஜ்ஞாபயே. (ப்ர்திவ்யை தேவயஜந்யை) என்ற விடத்திலும் (ப்ர்திவ்யை வ்ரஜம் கச்ச) என்ற விடத்திலும் அர்த்தத்திற்குச் சேர (ப்ர்திவ்யா:) என்று தானிருக்க வேண்டும். ச்சாந்தஸ வ்யத்யயமாகவே (ப்ர்திவ்யை) என்றிருக்கிறது. பதகாரர் இங்கே என்ன பண்ண முடியும்? ஒன்றும் பண்ண முடியாதாகையால் உள்ளபடியே பதபாடமாயிற்று. மேலே (ப்ர்திவ்யா அதேவயஜந:) என்று வந்த விடத்தில் ச்சாந்தஸவிபர்யயத்திற்கு இடமில்லாதபடி (ப்ர்திவ்யா:) என்றே பதபாட மவதரித்துள்ளது. கீழே வேத புருஷன் (ப்ர்திவ்யை) என்று ஸ்பஷ்டமாகக் காட்டியுள்ள வழியை விட்டு இங்கே பதகாரர்

வேறு விதமாக ஏன் பதபாடம் பண்ணினர்? என்று விமர்சிக்க வேண்டியது வித்வான்களுடைய கடமையல்லவா? விமர்சித்தால் ச்சாந்தஸவ்யத்யயத்திற்குப் பதகாரர் தாம் இடமளிப்பதில்லை யென்பது தான் ஸித்தாந்தமாகத் தேறும். இதே போல் பரச்சத ஸ்தலங்களிருந்தாலும் இன்னும் இரண்டிடங்கள் காட்டுகிறேன்.

விச்வரூபாநுவாகத்தின் முடிவில் (யாம் மலவத் வாஸஸம் ஸம்பவந்தி) என்ற தற்குமேல் (தஸ்யை ஸ்தேந:, தஸ்யை ஹ்ரீதமுகீ, தஸ்யை கலதி:, தஸ்யை க்லீப:, தஸ்யை காண:, தஸ்யை துச்சர்மா) என்று பல வருவது வைதிகர்களறிந்ததே. இவற்றினிடையில் (தஸ்யா அப்ஸுமாருக:, தஸ்யா உத்பந்துக:, தஸ்யா உந்மாதுக:) என்கிற வாக்யங்களும் வருகின்றன. இந்த கெட்டத்தில் முதலில் (தஸ்யை) என்று ஸ்பஷ்டோக்தியிருப்பதைக் கொண்டும், மேலும் (தஸ்யை, தஸ்யை, தஸ்யை) என்றே ஆம்ரேடிதமிருப்பது கொண்டும் (தஸ்யா அப்ஸுமாருக:) இத்யாதி ஸ்தலத்திலும் (தஸ்யை) என்றே பிரிக்கவேண்டியது ப்ராப்தமாயிருக்க, இதற்கு மாறாக [அச்சுபரமான ஸ்தலங்களிலெல்லாம்] தஸ்யா: என்றே பதபாட மிருப்பது விமர்சிக்கப்பட வேண்டும். விமர்சித்தால், அர்த்தத்திற்குச் சேர (தஸ்யா:) என்று பஞ்சம்யந்தமாகவே யிருக்கவேணும். ஏனென்றால் (ய: ஜாயதே) என்று முன்னே யிருக்கையாலும் அதற்கு ஒவ்வொரு வாக்யத்திலும் அநுஷங்கமாகையாலும் (ஜநிகர்த்து: ப்ரக்ருதி:) என்கிற காரகஸூத்ரத்தாலே பஞ்சமீவிபக்தி ப்ராப்தமாகையாலும், அது தானும் (யஸ் ததோ ஜாயதே) என்கிற முந்தின வாக்யத்தாலே ஸ்பஷ்டீக்ருதமாகையாலும் ச்சாந்தஸ வ்யத்யயம் கொள்ளாத பதகாரர் (தஸ்யா:) என்றே பிரித்தது யுக்தம். மற்று மோரிடம் காட்டி நிற்கிறேன்; (இந்த்ராண்யா ஏகாதசீ—அதித்யை த்வாதசீ) என்றவிடத்தில் (அதித்யை) என்கிற ஸ்பஷ்டோக்தியைக் கொண்டு (இந்த்ராண்யா ஏகாதசீ) என்றவிடத்தில் (இந்த்ராண்யை) என்றே பதம் பிரிக்கவேண்டும். ஆனல் இந்த்ராண்யா: என்று தான் பதபாடம்; ஏன்? ச்சாந்தஸவ்யத்யயம் பதகாரருக்கு அநபிமதமாகையாலே. ஸந்தேஹாஸ்பத ஸ்தலங்கள் இவைபோல்வன பல்லாயிரமுள்ளன; அவ்வவ்விடங்களிலெல்லாம் சாஸ்த்ரபாண்டித்யமும் விவேக கௌசலமுமுள்ளவர்கள் தாராளமாகத் தங்கள் பாண்டித்யத்தையும் விவேக சக்தியையும் செலுத்தி, பிற்காலத்தில் ஸந்தேஹ முதிக்க வொண்ணாதபடி செய்து கொள்ளலாம், ச்சாந்தஸவ்யத்யயங்களைப் பற்றி அஞ்சவேண்டிய அவகாசமில்லை என்று இவ்வளவோடு நிற்கிறேனிப்போது. .... .... .... *

## 94. தேவாலய ஸத்ஸம்ப்ரதாயோபந்யாஸம்

(பின்னுனரீக்குத் தத்துவம் தெரிவதற்காக இதுமுதல் நான்கு வியாஸங்கள்.)

உலகில் யாவரும் கொண்டாடும்படி அமையவேண்டிய வாசகங்களுக்கு மூவகையான குணங்கள் முக்கியமாயிருக்க வேண்டும். (1) சப்த தோஷமொன்று மின்றிக்கே யிருக்கை. (2) தோஷமொன்று மின்றிக்கே யிருப்பது மட்டுமல்லாமல் குணங்களும் நிரம்பியிருக்கை. (3) வாசிப்பவர்களுடைய மனத்தை ஈஷத்தும் புண்படுத்தாமலிருக்கை. ஆக இப்படி மூவகைப்பட்ட குணங்களுள் மூன்றாவதாகச்

சொல்லப்பட்ட குணம் மிக முக்கியமாக அமையவேண்டும். பிறர் மனத்தை நோவச் செய்ய வேண்டுமென்பதையே முக்கிய லக்ஷியமாகக்கொண்டு எழுதப்படும் வியாஸங்களானவை முடிவில் எழுதினவர்களின் மனத்தையே நோவச் செய்து நிற்குமென்பது நிச்சயம். ஆனால் உண்மையான விஷயங்களை எடுத்துரைத்தால் மதபேதமும் மதிபேதமுமுடையாருடைய மனம் புண்படுமாதலால் அதற்கு அஞ்சி உண்மையான விஷயங்களை யெடுத்துரையாமல் இருந்து விடலாமாவென்று சிலர் கேட்கக்கூடும். திடமான பிரமாணங்களைக்கொண்டு நன்கு நிலைநாட்டக்கூடிய யதார்த்த விஷயங்களை யெடுத்துரைக்க ஒருவரும் அஞ்சவேண்டிய அவசியமில்லை. அவற்றால் பெரியார் மனம் புண்படாது. நியாயமான விஷயங்களைத் தெரிவித்துத்தானாகவேண்டும். அவற்றால் சிலருடைய மனம் புண்பட்டால் ஸ்ரீ பாஷ்யம் சததூஷணி



முதலான மஹாக்ரந்தங்களும் ஹேயமாகும். ஆகவே உண்மையுரைகள் வெளிவருவதற்கு ப்ராமாணிகர்கள் உகக்கவேண்டும். வெளிவரும் விஷயங்களில் உண்மைக்கு மாறுபாடிருந்தால் சீறுமலும் கூசாமலும் ப்ரமாண புரஸ்ஸரமாய் அதை நிரூபிக்க முன்வர வேண்டும் ப்ராமாணிகர்கள். அதை விட்டு வீணாக வசை கூறுவது நலமன்று. இது முதலாக ஐந்தாறு உபந்யாஸங்களுக்கு முகவுரையாக இது விஜ்ஞாபித்தபடி.

திவ்யதேசங்களான விஷ்ணுவாலயங்களெல்லாம் அநாதிகாலமாக ஸ்ரீவரவரமுநி ஸம்ப்ரதாயமாகவே விளங்கி வருகின்றனவென்பதில் யார்க்கும் விவாதமிராது. சோழநாட்டில் மூன்று நான்கு அல்லது ஐந்தாறு; நடுநாட்டில் ஒன்று, தொண்டநாட்டில் இரண்டு மூன்று. ஆக பத்தெட்டு ஸ்தலங்கள் தவிர மற்ற ஸ்தலங்களெல்

லாம் தென்னாசார்யஸம்பிரதாயமாகவே விளங்கிவருகின்றன. வேறு வகையாகக் காணும் சில திவ்யதேசங்கள் ஸமீபகாலத்தில் மாறுபடுத்தப்பட்டன வென்பதிலும் யார்க்கும் ஸந்தேஹமிராது. சோழநாட்டில் கண்டியூரையும் தஞ்சைமாமணிக் கோயிலையும் தென்னாசார்ய ஸம்பிரதாயமாக ஸேவித்தவர்கள் நாளைக்கும் பல்லாயிரவர் உளர். அடியேனும் பலகால் ஸேவித்தவன். இவை ஸம்பிரதாயம் மாறினது அறுபது வருஷங்களுக்கு மேல் இராது. திருக்குடந்தை திருவயிந்திரபுரம் திருவெவ்வுளூர் முதலிய திருப்பதிகள் மாறுபட்டு 70, 75 ஆண்டுகட்கு மேலே ஆய்விட்டதென்று அவர்களே சொல்லுகிறார்கள். எப்படியானாலும் கி. பி. பத்தொன்பதாவது நூற்றாண்டின் பிற்பகுதியில்தான் இப்படி தேவாலயங்களில் திருமண்காப்பு மாறுபட ஆரம்பித்ததென்பது அனேக ஆதாரங்களால் ஊர்ஜிதமான விஷயம்.

நமது ஸ்ரீ வைஷ்ணவஸம்பிரதாயத்தில் ஆழ்வார்களும் ஆசாரியர்களும் முக்கியமானவர்கள். இவ்வாழ்வாராசாரியர்களின் அவதாரஸ்தலங்களில் ஒன்று தப்பாமல் எல்லாம் தென்னாசார்ய ஸ்தலங்களாகவே நாளைக்கும் விளங்கி வருகின்றன. அந்த அடைவையும் கீழே சுருக்கமாகக் காட்டுகிறேன் :—

| (ஆழ்வார்கள்) | (அவதாரஸ்தலங்கள்) |
|---|---|
| 1. பொய்கையாழ்வார் | ஸ்ரீ காஞ்சீ யதோக்தகாரிஸன்னிதி |
| 2. பூதத்தாழ்வார் | திருக்கடல் மல்லை ஸன்னிதி |
| 3. பேயாழ்வார் | மயிலைப் பெருமாள் ஸன்னிதி |
| 4. திருமழிசையாழ்வார் | திருமழிசைப் பெருமாள் ஸன்னிதி |
| 5. நம்மாழ்வார் | திருக்குருகூர் ஸன்னிதி |
| 6. மதுரகவிகள் | திருக்கோளூர் ஸன்னிதி |
| 7. குலசேகராழ்வார் | (அவதாரஸ்தலம் ஒரு கலையார்க்குமில்லை.) |
| 8. பெரியாழ்வார் | ஸ்ரீவில்லிபுத்தூர் ஸன்னிதி |
| 9. தொண்டரடிப்பொடியாழ்வார் | திருமண்டங்குடி ஸன்னிதி |
| 10. திருப்பாணாழ்வார் | உறையூர் நாச்சியார் ஸன்னிதி |
| 11. திருமங்கையாழ்வார் | திருவாலி திருநகரி ஸன்னிதி |

ஆக ஆழ்வார்களின் அவதார ஸ்தலங்கள் யாவும் தென்னாசார்ய ஸம்பிரதாய ஸ்தலங்களாக விளங்கி வருவதோடு இவற்றில் வேறு ஸம்பிரதாயத்தின் ஸம்பந்தம் விவாத விஷயமாகக்கூட இல்லை என்பது அனைவருமறிந்ததே.

இனி ஆசாரியர்களின் அவதாரஸ்தலங்களைப்பற்றித் தெரிவிக்கிறேன். சில ஆசார்யர்களின் அவதார ஸ்தலங்கள் அப்ரஸித்தங்களும் விசேஷ வைபவமில்லாதவைகளுமாதலால் அவை விடப்படுகின்றன. ஆனால் அவை வேறு ஸம்பிரதாயஸ்தருடைய அதீனமல்லவேயல்ல என்பது மாத்திரம் ஞாபகத்திலிருக்கவேணும்.

| | |
|---|---|
| 1. ஸ்ரீமந்நாதமுனிகள் | காட்டுமன்னார்ஸன்னிதி |
| 2. ஆளவந்தார் | ஷை |
| 3. திருக்கச்சிநம்பிகள் | பூவிருந்தவல்லி |
| 4. எம்பெருமானார் (உடையவர்) | ஸ்ரீபெரும்பூதூர்ஸந்நிதி |

| | | |
|---|---|---|
| 5. | எம்பார் | மழலை (மதுர) மங்கலம்ஸன்னிதி |
| 6. | ஆழ்வான் | கூரம்ஸன்னிதி |
| 7. | முதலியாண்டான் | பச்சைப்பெருமாள்கோவில் |
| 8. | பட்டர் | திருவரங்கம் பெரியகோயில் |
| 9. | நஞ்சீயர் | திருநாராயணபுரம் |
| 10. | பிள்ளைலோகாசாரியர் | திருவரங்கம் பெரியகோயில் |
| 11. | திருவாய்மொழிப்பிள்ளை | குந்தீநகரம் ஸன்னிதி |
| 12. | மணவாளமாமுனிகள் | ஆழ்வார்திருநகரி |

இவ்வாசாரியர்கள் தவிர மற்ற ஆசாரியர்களுக்கு அவரவர்களின் அவதார ஸ்தலங்களில் ஸன்னிதி வைபவங்கள் இருப்பதாகத் தெரியாமையாலே அவற்றைப் பற்றி இங்கு ப்ரஸ்தாவிக்கவில்லை. ... .... ... *

## 95. ஆசார்யபுருஷ—மடாதிபதிவைபவோபந்யாஸம்.

எம்பெருமானார் தொடங்கி ஆசார்ய பரம்பரையானது இரண்டு வகுப்பாகப் பிரியலுற்றது. ஆழ்வான், முதலியாண்டான், எம்பார், பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை



இத்யாதி ஆசாரியர்கள் ஒருவகுப்பைச் சேர்ந்தவர்கள். மற்றொரு வகுப்பைச் சேர்ந்த ஆசாரியர்களுக்கு அவதாரஸ்தலங்களில் அர்ச்சா விசேஷமிருப்பதாகத் தெரியவில்லை, இதர ஸன்னிதிகளிலும் அவ்வாசாரியர்களுக்கு ப்ரதிஷ்டாதிகள்

நடந்திருப்பதாகத் தெரியவில்லை. ஆகவே அவர்களைப்பற்றி இங்கு எழுதவேண்டிய தொன்றுமில்லையென நினைக்கிறேன்.

ஆசாரிய வகுப்பில் முக்கியமாக வொன்று தெரிவிக்க வேண்டியதுமுண்டு; அவர்களின் அவதார ஸ்தலங்களெல்லாம் தென்னசார்யஸம்பிரதாய ஸ்தலங்களாகவே நாளைக்கும் விளங்குகின்றனவென்பது மாத்திரமேயன்றிக்கே, அவர்களின் ஸந்ததியில் தோன்றினவர்கள் என்கிற காரணத்தினல் தத்வம்சியர்கள் பலர்க்கும் ஸ்ரீரங்கம் முதலான ஸுப்ரஸித்த திவ்யதேசங்களில் விசேஷ மரியாதைகள் ஏற்பட்டிருக்கின்றனவே, அந்த மரியாதைகளைத் தொன்றுதொட்டு அநுபவித்து வருகின்ற ஆசார்ய புருஷர்கள் பலரும் நாளைக்கும் தென்னசார்ய ஸம்பிரதாயஸ்தர்களே யென்பது ப்ரத்யக்ஷம். ஸ்ரீரங்கத்தில் இன்று நேற்று ஒருவரால் ஏற்படுத்த முடியாதபடிக்கும் "ராமாநுஜார்ய திவ்யாஜ்ஞா வர்த்ததாம் அபிவர்த்ததாம்" என்று தேசமெல்லாம் கொண்டாடும்படிக்கும் எம்பெருமானருடைய திவ்யாஜ்ஞாஸித்தமாக விளங்கிவருகின்ற ஆசார்யபுருஷ மரியாதைகளை நாம் எடுத்துக்காட்ட வேண்டாதே ப்ரத்யக்ஷிக்கின்ற வுலகத்திற்கு இங்கு விரிவு வேணுமோ?

ஜீயர்களைப்பற்றியும் சிறிது தெரிவிக்கிறேன். ஸன்னிதிகளின் கைங்கரிய நிர்வாஹத்திற்கென்றே ஆங்காங்கு மடாதிபதிகளாக விளங்கி வருகின்ற யதிகள் யாவரும் தென்னசாரியர்களே. வானமாமலை ஜீயர், திருக்குறுங்குடி ஜீயர், ஸ்ரீரங்க நாராயண ஜீயர், எம்பெருமானர் ஜீயர், திருமலை ஜீயர், அழகியமணவாள ஜீயர், திருமாலிருஞ்சோலை ஜீயர், யதிராஜ ஜீயர் என்றிங்ஙனே வழங்கிவரும் யதிவரர்களெல்லாரும் திவ்யதேச யோகக்ஷேம பரிபாலனத்திற்காகவே நியமனம் பெற்றவர்கள். இப்படி இதரவகுப்பில் ஸந்நிதி பரிபாலனத்திற்கென்று ஒரு யதியும் நியமிக்கப்பட்டிருக்கவில்லை யென்பது ப்ரத்யக்ஷம். அன்னவர்கள் வாழுமிடமெல்லாம் ஆற்றங்கரையோரமாகவே யிருக்குமாதலால் ஆச்ரம தர்ம பரிபாலனர்த்தமாக அவர்கள் ஸந்ந்யஸித்து இரு முப்பொழுதேத்தும் பரமைகாந்திகளாக விளங்கி வருவது ஒருவிதமான பெருமையேயாகும் ப்ரக்ருதத்தில் திவ்யதேச பரிபாலனமே விஷயமாதலால் இந்தப் பெருமையை யடைந்த ஜீயர்கள் தென்னசாரியர்களே. *பதியே பரவித்தொழும் தொண்டர் தமக்குக் கதியே* என்றும், *கண்டியூரரங்கம் மெய்யம் கச்சி பேர் மல்லையென்று மண்டினருய்யலல்லால் மற்றையார்க்கு உய்யலாமே?* என்றும், *உன்கடைத்தலை யிருந்துவாழும் சோம்பரையுகத்திபோலும் சூழ்புனலரங்கத்தானே * என்றும் ஆழ்வார்கள் பேசினபெருமையையும், "செங்கல் பொடிக் கூறை வெண்பல் தவத்தவர் தங்கள் திருக்கோயில் சங்கிடுவான் போகின்றார்" என்று ஆண்டாளுடைய மங்களாசாஸனத்தையும் பெற்றவர்கள் தென்னசாரியர்களேயென்று தெரிவித்துக்கொண்டபடி. மேலேகுறித்த ஆண்டாள் பாசுரத்தின் நிர்வாஹங்களிலிதுவுமொன்று. அடியேனுடைய திவ்யார்த்த தீபிகை காண்க.

கோயில், ஸ்ரீவில்லிபுத்தூர், ஆழ்வார்திருநகரி, திருக்குறுங்குடி முதலிய திவ்யதேசங்களில் ஸ்ரீமந்நாதமுனிகள் காலம் தொடங்கி அரையரென்று நியமிக்கப்பட்டுள்ளாருடைய திருவம்சஸ்தர்களும் தென்னசார்ய ஸம்பிரதாயஸ்தர்களே, ... *

தென்கலை, வடகலை என்கிற வியவஹாரம் மட்டும் தொன்றுதொட்டு வந்திருக்கிறது. கம்ப ராமாயணத்தின் ஆரம்பப் பகுதியில் "வடகலை தென்கலை வடுகு கன்னடம்" என்கிற செய்யுளிருப்பது ப்ரஸித்தம். இது பாஷையைப் பற்றினது. ஸம்ஸ்க்ருதம் தமிழ் தெலுங்கு கன்னடம் என்கிற பாஷைகளையே அங்குக் கம்பர் விவக்ஷித்திருக்கிறாரென்பது அவ்விடத்திலேயே இரண்டாமடியினால் ஸ்பஷ்டம். வடகலையை விசேஷித்து ஆதரிப்பவர்கள் வடகலையார்; தென்கலையை விசேஷித்து ஆதரிப்பவர்கள் தென்கலையார் என்று கொண்டு இந்த வ்யவஹாரம் நிகழ்வதாயிற்று. ஆனால் இஃது என்றைக்கு நிகழத் தொடங்கிற்று? இந்த வ்யவஹாரத்திற்கு ப்ரதம ப்ரவர்த்தகர் யார்? என்று கேட்டால் விடை கூறமுடியாது. இது முன்னோர்களின் நூல்களில் ஏறியிருப்பதுமன்று. நீதி மன்றத்துக் காகிதங்களில் நிறைய ஏறியிருக்கின்றதென்பது தெரிந்ததே. வடகலை தென்கலை யென்கிற இந்த சொற்களுக்கும் புண்ட்ரத்திற்கும் யாதொரு ஸம்பந்தமுமில்லாதிருக்கவும், ஒரு வகை யாகாரமுள்ள திருமண்காப்புக்குத் தென்கலை நாமமென்றும், மற்றொருவகை யாகாரத்திற்கு வடகலை நாமமென்றும் வ்யபதேசம் உண்டாயிருப்பது இனி மாறுபடப் போகிறதில்லை. இதைப்பற்றி இங்கு அடியேன் விமர்சிக்கப் புகவுமில்லை. தென்னுசார்யஸம்பிரதாயம் என்கிற வ்யபதேசம் மட்டும் சிறிது ஆழ்ந்து ஆராயத்தக்கது. வடவாசார்யர் என்கிற ப்ரதிநிர்தேசம் அடியோடில்லாமல் தென்னுசார்யரென்கிற வ்யபதேசம் மட்டுமே நிகழ்ந்து வருதலால் இந்த வ்யபதேசத்திற்கு இலக்கானவர்கள் யாவர்? என்று ஆராயவேண்டுவது அவசியமாகிறது. இதை யாராய்ந்து ஒருபந்யாஸ மெழுதவேணுமென்று சில மஹான்கள் நியமித்ததனாலும் இதில் ப்ரவர்த்திக்கிறேன்.



விவாதப் பேச்சுக்களில் தலையிடாத பரமஸாத்விகர்களான பெரியார்களும் 'தென்னுசாரியர்கள், தென்னுசார்ய ஸம்பிரதாயம்' என்கிற வ்யபதேசங்களை வழங்கி வருதலால் இதற்கு இலக்கானவர்கள் யாவர்? என்று பிராமாணிகமாக விமர்சித்து முடிக்கவேணும். இந்த வ்யபதேசமானது (தென்கலையார் என்கிற வ்யபதேசம் போலே) இக்காலத்தவர்களை நோக்கியதன்று. பூருவாசாரியர்களையே நோக்கியதென்பதில் ஐயமில்லை. ஸ்ரீமந்நாத முனிகள் ஆளவந்தார் முதலான

ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களனைவரும் தென்னாசாரியர்களெனப்படுவர். சக்ரவர்த்தி திருமகனார் அகஸ்த்யாச்ரமத்தருகே யெழுந்தருளும்போது இளையபெருமாளை நோக்கி * தக்ஷிணா திக் க்ருதா யேந சரண்யா புண்யகர்மணா * என்று அகஸ்திய முனிவர் பெருமையைக் கூறுகின்றார். குலசேகராழ்வார் பெருமாள் திருமொழியில் அகஸ்திய முனிவரை "வண்டமிழ்மாமுனி" என்றே வ்யபதேசிக்கிறார். தேசிகனும் த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளியில் "ஸாச அகஸ்த்ய ப்ரஸூதா த்விதி பரிஜக்ர்ஹே" என்றும், பாதுகாஸஹஸ்ரத்தில் "கும்பீஸூநோரஸூர கபலக் ராஸிநஸ் ஸ்வைரபாஷா" என்றும் பெருமதிப்புத் தோற்றப் பேசியுள்ளார். ஆக, ஆழ்வார்களின் ஸம்ப்ரதாயத்தில் ஊற்றமுள்ள ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களனைவரும் தென்னாசாரியர்க ளென்கிற வ்யபதேசத்திற்குப் பாத்திரமாயினர். இதற்கு ப்ரதி கோடிகளாகச் சொல்லத் தக்கவர்கள் திவ்யஸூரி - திவ்யப்பிரபந்தங்களில் அவகாஹனமும் மதிப்பு மற்றவர்களான ஸ்மார்த்த மாத்வாதிகளே யாவர். அவர்களைத் தவிர்த்த ஸ்ரீவைஷ்ணவாசாரியர்களுக்கெல்லாம் தென்னாசார்யர்களென்கிற வ்யபதேசம் அவிசேஷமாகவுள்ளது. வேதாந்த தேசிகனுட்பட ஸகலாசாரியர்களுக்கும் இந்த வ்யபதேசம் ஸமமான தென்பது தத்துவமுணர்ந்த பெரியார்களுக்கு உடன்பாடு. .... ... .... .... .... .... *

## 98. வேதாந்த தேசிக வைபவாநுபவோபந்யாஸம்.

வேதாந்த தேசிகனும் தென்னாசார்ய வகுப்பில் அந்வயித்தவரே யொழிய அவர்க்கென்று தனியேயொரு வகுப்பிருந்ததாக நினைப்பது நியாயத்திற்குச் சேராது. தென்னாசாரியர்களாலேயே தொன்று தொட்டுப் பரிபாலிக்கப்பட்டு வருகிற திவ்யதேசங்கள் பலவற்றில் அவருடைய திவ்யமங்கள விக்ரஹம் ப்ரதிஷ்டை பெற்றும் உத்ஸவாதிகளைப் பெற்றும் வருவது அபலபிக்க முடியாதது. திவ்ய தேசங்களில் ஸன்னிதிக்கு வெளிப்பட்ட விடங்களில் அவர்க்கு ஆலய நிர்மாண-மஹோத்ஸவோபலாலனாதிகள் ஆரம்பமாகி எத்தனை ஸம்வத்ஸரமாகி யிருக்குமென்று வினவினால் ஆர்ஜவத்துடன் விடை கூறவல்லார் எவ்விதமாக விடை கூறுவரென்றால் நிகழும் நூற்றாண்டில் தானென்பர்; சென்ற நூற்றாண்டிலேயே ஆரம்பமாயிற்று என்றும் சொல்லுவர். உடனே எதற்காக இந்த விச்வாமித்ர ஸ்ருஷ்டிகள்? என்று வினவினால் த்ருப்திகரமான விடை வருமா? என்று பார்க்க வேணும். அறுநூறாண்டுகட்கு முன்பு அவதரித்திருந்த ஆசிரியர்க்கு அந்நாள் தொடங்கி ஒருவிதமான வழிபாடு நடந்துவாரா நிற்க, பிற்பட்ட காலத்தில் (அதாவது மிகவும் ஸங்கிஹித காலத்தில்) திடீரென்று ஒரு கோலாஹலத்தைக் கிளப்பி அஸ்தாநே மாச்சரியத்தை வளரச் செய்யும் செயல்களை நடத்திக்கொண்டு போருவதானது எம்பெருமானுடைய லீலைகளிலே இதுவுமொன்று என்று நினைப்பதற்குறுப்பா மத்தனை யொழிய வேறு பேசத்தானுவதுண்டோ?

காஞ்சீபுரியில் திருக்கச்சி நம்பிகள் ஸன்னிதி யுள்ளது. அதைப் பரிபாலிக்கும் பொறுப்பை பஸ்மதாரிகளான சைவர்கள் பாம்பரையாக ஏற்று வருகிறார்கள்,

அவர்கள் திருக்கச்சி நம்பிகளின் ஸம்பிரதாயம் வேருயிருக்கின்ற தென்பதை யுணராதவர்களல்லர். அந்த ஸம்பிரதாயத்தை மாற்றித் தங்களைப்போல் அவரையும் (அர்ச்சையில்) பஸ்மதாரியாக ஆக்கிவிடவேணுமென்று நினைப்பதாகவோ அதற்குரிய சேஷ்டைகள் செய்வதாகவோ இதுவரையில் தெரியவில்லை. காஞ்சியில் மட்டுமன்று; மற்றும் அனேக ஸ்தலங்களிலும் திருக்கச்சி நம்பிகள் பக்கலிலே பரிவு காட்டுபவர்களும் அவர்க்குத் தொண்டுசெய்பவர்களும் சைவர்களாகத்தான் காணப்படுகிருர்கள். அவர்கள் நம்பியின் சின்னங்களை மாறுபடுத்த முயலுவதில்லை. தங்களுடைய சின்னங்களை யிட்டு அவரைத் தனியே பிரதிஷ்டை செய்து தாங்கள் தனியாக ஆராதிக்கவும் ஆசைப்படுவதில்லை. ஸகலவித யோக்யதா ஸம்பந்நரான தேசிகனிடத்தில் ஜந்மாந்தரஸஹஸ்ர நற்றவப் பயனுக ஒரு வகுப்பினர்க்கு பக்தி விளைந்தது உஜ்ஜீவந ஹேதுவேயென்பதில்ஐயமில்லை, விப்ரதிபத்தியு மில்லை. அவ்வாசார்ய ஸார்வபௌமனுடைய வழிபாடுகள் தொன்றுதொட்டு எந்தவிதமாக நிகழ்ந்து வருகின்றதென்பதைப் பிராமாணிகர்கள் அபலாபம் செய்ய முடியுமா? முதன் முதலாகத் திருவரங்கம் பெரிய கோயிலில் தேசிக திவ்யமங்களவிக்ரஹத்தில் ஒரு விபர்யயம் செய்யவேணுமென்று ஒருவகுப்பினர்க்குத் தோன்றிற்று. அப்படியே



உயர்திரு· கர்னன் கம்பெனி
சேஷாசலம் செட்டியாரவர்களின் கௌரவிப்பு.

செய்தார்கள். செய்த க்ஷணத்திலேயே ஹாஹாகாரம் ஏற்பட்டது. அந்த விஷமச் செயல் அநீதிதானென்று முடிவு செய்த அரசாங்கப் பிரபுக்கள் அதற்காக ஆயிரம் ரூபாயபராதம் விதித்தார்கள். அது மூன்று நீதிமன்றங்களிலும் ஊர்ஜிதமாயிற்று. உலகத்தில் எத்தனையோ விஷமச் செயல்களுக்கு எத்தனையோ விதமான சிக்ஷைகள் ஏற்படுவதுண்டு. ஆயிரம்ரூபாயபராதம் விதிக்கப்பட்டதாகக் காணும் ஸம்பவம் இஃதொன்றுதான். இதனுல் தேசிகனுடைய சின்னத்தை மாற்ற முயல்வது மிகவும் தவறு என்பது கையிலங்கு நெல்லிக்கனியாக விளங்கவில்லையா? திருவவதாரஸ்தலத்து ப்ரக்ரியைகளும் ப்ரஸித்தமானவையே. பெரியதொரு வகுப்பில் விவேகிச்ரேஷ்டர்கள் இல்லையென்று சொல்ல முடியுமா? நெஞ்சாலாவது நினைக்கமுடியுமா?

வஸ்துஸ்திதியைப் பலபல விஷயங்களில் அடியேன் எடுத்துக் காட்டுவது போல இவ் விஷயத்திலும் மனச்சாக்ஷியை மீறாமல் எடுத்துக் காட்டினதொழிய வேறில்லை. இதற்காக அடியேனை வெறுப்பது யுக்தமாகுமா? இது ப்ராமாணிகமா? அப்ராமாணிகமாக ஆக்ரஹத்தோடு தெரிவிக்கப்படுகிறதா? என்பதையன்றோ ப்ராமாணிக ப்ராஜ்ஞர்கள் பரிசீலிக்க வேணும். நெஞ்சை நடுநிலையில் வைத்து யுக்தாயுக்தங்களை விவேகிக்க வேண்டாவா? திருப்புட்குழி ஸ்வாமி யென்று போற்றப்படும் மஹான் போல்வார் "அபிநிவேச வசீக்ருத சேதஸாம் பஹுவிதாமபி ஸம்பவதி ப்ரமः" என்கிற ஆளவந்தார் ஸ்ரீஸூக்திக்கேயன்றோ இலக்காகிக் காலங்கழித்தனர்.

நன்னூல் முடிவில் "பழையன கழிதலும் புதியன புகுதலும், வழுவல கால வகையினானே" என்கிற சூத்திரம் பிரயோகங்களைப் பற்றியமைந்தது; அது இத்தகைய விபர்யயங்களுக்கும் கைகொடுக்கும் போலும் என்றெண்ணி அடியேன் ஸமாஹிதனாகிறேன். ... ... .... ... *

## 99. மணவாளமாமுனிகளின் பரமப்ராமாணிகத்வ ப்ரதர்சநோபந்யாஸம்.

நம்முடைய பூர்வாசார்ய பரம்பரையானது மணவாளமாமுநிகளோடு முடிவு பெற்றிருக்கின்றது. மாமுனிகளுக்கு முன்னே க்ரந்தங்களருளிச்செய்த ஆசாரியர்கள் பலருளர். அவர்களில் ஒருவர்க்குமில்லாத வேற்றம் மாமுனிகளுக்கு அஸாதாரணமாக வொன்றுண்டு. அதாவது பரமப்ராமாணிகத்வ பரமகாஷ்டை. இதனால் மற்ற ஆசாரியர்கள் அப்ராமாணிகர்களா? என்று ஸஹஸா கேட்டுவிடலாகாது. ப்ராமாணிகத்வ ப்ரகாரங்கள் பலவாறுண்டு. ப்ரமாணகதிக்கு அவிரோதேந சொல்லுமவர்கள்-எழுதுமவர்கள் ப்ராமாணிகர்கள் என்பது யாவருமறிந்தது. அபூர்வமான சில அர்த்தவிசேஷங்களைத் தமக்கு முன்னே சில மஹான்கள் அருளிச்செய்திருந்தால் அவ்வர்த்த விசேஷங்களை [ப்பிற்பட்டவர்களான] தாங்கள் எழுதநேரும்போது "இவ்வர்த்தத்தை ஏற்கெனவே இன்னார் அருளிச்செய்திருக்கிறார்" என்று காட்டவேண்டியது முறை; அப்படி காட்டாமற் போனாலும் அப்ராமாணிகத்வம் வந்து விடாது. எழுதின அர்த்தங்கள் ப்ராமாணிகமாயிருந்தால் போதுமானது. முன்னோர் மொழிந்த முறை தப்பாமல் கேட்டுப் பின்னோர்ந்து தாமதனைப் பேசாமல் தம் நெஞ்சில் தோற்றினதே சொல்லுமவர்களும், அப்படிச் சொல்லுவதோடு நில்லாமல் [இது சுத்தவுபதேச வரவாற்றது] இதுதான் சுத்த ஸம்ப்ரதாய பரம்பரயா வந்த அர்த்தம் என்று சொல்லி வஞ்சிப்பவர்களும் அப்ராமாணிகர்களே யொழிய, ப்ராமாணிகார்த்தங்களை யெழுதி அவற்றுக்கு ஆகரம் காட்டாமற் போனாலும் ப்ராமாணிகத்வத்திற்குக் கொத்தையில்லை. மற்றுள்ள ஆசார்யர்களைப்பற்றின வரையில் இது நிரவத்யமான வார்த்தையேயாகும். "மணவாளமாமுனிகளின் பரமப்ராமாணிகத்வ பரமகாஷ்டை" என்று முன்னம் அடியேன் நிர்தேசித்திருப்பதால் மணவாளமாமுனிகளைப் பற்றிமட்டும் தனிப்படவே பேச வேண்டும். மாமுனிகள் தாமாகப் பலபல அபூர்வவிஷயங்களை யருளிச்செய்கிறார்

வியாக்கியானங்களிலே. அவற்றைப்பற்றி விசாரமில்லை. ஏற்கெனவே பூருவர்கள் அருளிச்செய்த விஷயங்களையும் ஸ்வாமி தாம் கையாளுகிறார். இதற்குப் பலவிடங்கள் காட்டலாம். ஏற்கெனவே அடியேன் சேகரித்து வெளியிட்டுள்ள **மாமுனிவன் மேற்கோள் விளக்கு** என்னும் நூலில் இது விசதமாக வுணரலாகும். அப்படி பரகீயக்ரந்தங்களிலிருந்து அர்த்தவிசேஷங்களை யெடுத்துக்காட்டுமிடங்களில் "இன்னவிடத்திலே இன்னார் இங்ஙனே யருளிச்செய்தார்" என்று மாமுனிகள் காட்டி யருளாதிருப்பது ஓரிடமுங் கிடையாது. மாமுனிகளின் திவ்யஸூக்திகளை மாச்சரியத்தினால் அநுபவிக்கப்பெறாதவர்கள் கிடக்கட்டும். அப்ரமேய பாக்ய வசத்தாலே அவற்றை யநுபவிக்கப் பிறந்தவர்களுங் கூட ஆழ்ந்துநோக்கி இத்தகைய பெருமைகளை உணரப் பெறாதார் பலருளர் என்பது அடியேனுடைய அனுபவத்தில் கண்டவிஷயம்.



சென்னை கீதா மந்திரத்தில் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீமந் நாராயண ஜீயர்ஸ்வாமி முன்னிலையில் ராமராஜ்யோபந்யாஸம் P.B.A.

ப்ரக்ருதம் ஒரே விஷயம் ஸ்தாலீபுலாகந்யாயேந காட்டுகிறேன். ஸ்ரீவசநபூஷணத்தில் (96.) "ஆத்ம குணங்களில் ப்ரதாநம் சமமும் தமமும்" என்பதொரு சூர்ணிகை. இவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாள மாமுனிகள் "சமமாவது அந்தஃகரண நியமநம்; தமமாவது பாஹ்யகரண நியமநம்" என்றருளிச் செய்து, இதற்கு ப்ரமாணங் காட்டியருளத் திருவுள்ளம்பற்றி "*சமச் சித்தப்ரசாந்திஸ் ஸ்யாத் தமச் சேந்த்ரிய நிக்ரஹ:* என்னக்கடவதிறே" என்று ஒரு ப்ரமாணம் காட்டி உடனே பூர்வாசார்ய ஸ்ரீஸூக்தியையும் காட்டவேண்டி "*க்ஷமா ஸத்யம் தமச் சம:* என்கிறவிடத்தில் 'தமோ பாஹ்ய கரணாநாம் அநர்த்த விஷயேப்யோ நியமநம்; சம:- அந்த: கரணஸ்ய ததா நியமநம்' என்றிறே பாஷ்யகாரருமருளிச் செய்தது." என்று கீதாபாஷ்ய ஸூக்தியை யெடுத்துக் காட்டியருளினார். இவ்வளவோடு நில்லாமல் அடுத்தபடியாக "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்றருளிச் செய்தார். அதன் கருத்து என்னவென்றால், பாஹ்யகரணாநாம் நியமநம் தம:, அந்த: கரண நியமநம் சம: என்று இப்படியே கொள்ளவேணு மென்கிற நிர்ப்பந்தமில்லை; அந்த: கரண

நியமநம் தமः, பாஹ்யகரண நியமநம் சமः என்று கொள்ளுவது முண்டு என்பதாம். கீழே இரண்டு ப்ரமாணங்களைத் தாமே யெடுத்துக் காட்டிவிட்டு அவற்றோடு ஸம்பந் தப்படாதபடி "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்று அருளிச் செய்வது மணவாள மாமுனிகளின் இயல்புக்குச் சேராது; அப்படியிருக்க எங்ஙனே யருளிச் செய்தா ரென்று விமர்சிக்க ப்ராப்தம். மேலேகாட்டின ஸ்ரீஸூக்தியில் "மாறிச் சொல்லுவது முண்டு" என்னாமல் "மாறிச் சொல்லுமிடமுமுண்டு' என்று ஸாதித்திருக்கையாலும், அதுதானும் கீதாபாஷ்ய ஸ்ரீஸூக்தியை உதாஹரித்த வுடனே ஸாதித்திருக்கை யாலும் பாஷ்யகாரரான ஸ்வாமியே மற்றோரிடத்தில் மாறிச் சொல்லி யிருக்கிறா ரென்று தெரிவிக்கப்பட்டதாகிறது. அப்படி ஓரிடத்தைத் தாம் காணாமல் அந்த ஸ்ரீஸூக்தியை ஒருகாலும் அருளிச் செய்யமாட்டார் மாமுனிகளென்பது ஸத்யம். இதுபற்றியே யன்றோ "பொய்யிலாத மணவாளமாமுனி புந்திவாழி" என்று உலக மெல்லாம் வாழ்த்திப் போருவது.

கேண்மின்; அந்த கீதாபாஷ்யத்திலேயே ஸ்வாமி தாமே மாறிச் சொல்லி யுள்ளார். (அதாவது)—பதினாறுமத்யாயத்தில் முதல் சுலோகத்தில் "தாநம் தமச் ச யஜ்ஞச் ச" என்றும், இரண்டாம் சுலோகத்தில் "த்யாகச் சாந்திः அபைசுநம்" என்றும் வருகிறது. அங்கும் தம சமங்களுக்கு விவரணமுள்ளது. கீழே காட்டின விவரணம் பத்தாமத்யாயத்தில் நான்காவது சுலோகத்தின் பாஷ்யத்திலுள்ளது. (16—1, 2ல்) காணும் விவரணம் அதனில் வேறுபட்டது. அந்தः கரண நியமனத்தை தமமாகவும், பாஹ்ய கரண நியமனத்தை சமமாகவும் இங்கு பாஷ்யகாரர் அருளிச் செய்துள்ளார். அவரும் ஸ்வோக்தி விருத்தமாக வருளிச் செய்பவரல்லர். இரண்டு படியையும் அவர் ப்ரமாணஸித்தமாகக் கண்டவராகையாலே ஒரு படியை ஓரிடத் திலும் மற்றொரு படியை மற்றோரிடத்திலும் அருளிச் செய்தார். மணவாளமா முனிகள் அவருடைய புநரவதாரபூதராதலால் இரண்டு படியும் தமக்கு ஹ்ருத்கதமா யிருக்கையாலே "மாறிச் சொல்லுமிடமுமுண்டு" என்றருளிச் செய்தார்.

ஸ்வாமி தேசிகனருளிச் செய்த தாத்பர்ய சந்த்ரிகையில் மேலே யெடுத்துக் காட்டிய பதினாறுமத்யாய ஸ்தலத்தில்—"ஏதேந கேஷாஞ்சித் அநயோச் சப்தயோர் வ்யுத்க்ரமேண அர்த்த வ்யாக்க்யாநம் நிரஸ்தம்" என்கிற பங்க்தி காணப்படுகிறது. மணவாளமாமுனிகள் தேசிகனுடைய காலத்திற்குப் பிற்பட்டவராகையாலே மாமுனிகளின் ஸ்ரீஸூக்திக்கு மறுப்பாக அது அருளிச்செய்ததென்று கொள் வதற்கு அவகாச லேசமுமில்லை. வேறு யாருடைய உக்திக்கு மறுப்பென்று விமர்சிக்குமளவில் சங்கர பாஷ்யத்திற்கு மறுப்பென்று ஸ்பஷ்டமாக விளங்கா நின்றது. ஆனால் பாஷ்யகாரருடைய ஸ்ரீஸூக்திக்கே மறுப்பாகத் தேறுவதால் இந்த பங்க்தி ப்ரக்ஷிப்தமாயிருக்கு மென்று தோன்றுகிறது. வ்யுத்க்ரமேண அர்த்த வ்யாக்க்யானம் பண்ணியருளினவர் பாஷ்யகாரருமாதலால் அவருடைய வியாக்கி யானத்தை நிரஸ்தமென்று ஸ்வாமி தேசிகன் நெஞ்சாலும் நினையாராகையாலே.

தாத்பர்ய சந்திரிகா ஸ்ரீஸூக்தி விஷயம் ப்ராஸங்கிகமாக ப்ரஸ்தாவிக்க நேர்ந்தது. பத்தாவது அத்யாயத்தில் பாஷ்ய ஸ்ரீஸூக்தியிருக்கும்படியையும்,

அங்கு சந்த்ரிகையில் தாம் விசேஷித்து அருளிச் செய்தபடியையும் மறக்க வல்லவரன்றே தேசிகன். சமம் தமம் என்று இரண்டு பதம் வேண்டியதில்லை; அந்யதர பதமிருந்தாலும் அதற்கே பாஹ்ய ஆந்தரகரண நியமனத்தைப் பொருளாகக் கொள்ள முடியும். ஆனாலும் தனித்தனி இரண்டு பதங்களிருப்பது வீணாகாதபடிக்கு அர்த்த பேதம் காட்டுவது யுக்தம் என்று திருவுள்ளம் பற்றி "...........பௌநருக்த்ய பரிஹாராய விஷயபேதே வக்தவ்யே நியமந க்ரமேண தமசமயோ: பாஹ்யாந்தரகரண விஷயத்வோக்தி:" என்று சந்த்ரிகையில் ஸாதித்திருப்பதனால் இதற்கும் சேராதபடியன்றே பதினாறுமத்யாயத்தில் சந்த்ரிகை அவதரித்துள்ளது. அன்றியும் "ஏதேந, வ்யுத்க்ரமேண கேஷாஞ்சித் வ்யாக்யாநம் நிரஸ்தம்" என்கிற பங்க்தியும் சிறிது பராமர்சிக்கத் தக்கது. ஏதேந என்பதற்கு 'பாஷ்யகாரர் இப்படி யருளிச் செய்திருக்கையாலே' என்று தானே பொருளாகும். நம்முடைய பாஷ்யகாரர் ஸாதித்ததனாலே சங்கரபாஷ்யம் எப்படி நிரஸ்தமாகும். இது மஹா ப்ராஜ்ஞர்கள் விமர்சிக்க வேண்டிய விஷயமென்று விட்டு விடுகிறேன்.

இந்த வியாஸத்திற்கு விஷயம் மணவாளமாமுனிகளின் பரம ப்ராமாணிகத்வ நிரூபணமே யாதலால் அதனைச் செவ்வனே செய்து களிப்பதுமட்டுமே இங்கு அடியேனுக்கு உத்திஷ்டம். .... .... .... .... .... *

## 100. ஏலாப்பொய்களுரைப்பானுபந்யாஸம்.

ஆண்டாள் கண்ணபிரானைத் தேடிக்கொண்டே செல்லுகின்றவள் 'அவனைக் கண்டீர்களா? அவனைக் கண்டீர்களா?' என்று எதிர்ப்பட்டவர்களை யெல்லாம் கேட்டுக்கொண்டே போகிறாள். எவனை? என்று அவர்கள் கேட்க, அவனுக்குப் பல அடையாளங்கள் சொல்லுகிறாள். ஒருபாட்டில் "ஏலாப் பொய்களுரைப்பானை இங்கே போதக் கண்டீரே" என்கிறாள். கண்ணபிரான் ஒரு ஸமயத்தில் "யதி மே ப்ரஹ்மசர்யம் ஸ்யாத் ஸத்யஞ் ச மயி திஷ்டதி" என்று பலரறியச் சொல்லி * ஸஞ்ஜீவயந்நபி ம்ருதம் ஸுதமுத்தராயா: * என்று அதிமாநுஷஸ்தவத்திலருளிச் செய்யும்படி அதிமாநுஷக்ருத்யத்தைப் பண்ணித் தன்னுடைய ஸத்ய வாதித்வத்தை நிலைநாட்டிக் கொண்டவன். அன்னவனை ஆண்டாள் அவலீலையாக 'ஏலாப்பொய்களுரைப்பானை' என்கிறாள். "பொய்யா வுன்னைப் புறம்பல பேசுவ புத்தகத்துக்குள கேட்டேன்" என்கிறாள் யசோதைப் பிராட்டி. நம்மாழ்வார் * மெய்போலும் பொய் வல்லன் * என்கிறார். அங்கே நம்பிள்ளையீடு;—"அர்ஜுநாதிகள் பக்கலிலிருக்குமா போலேயிறே துர்யோதநாதிகள் பக்கலிலுமிருப்பது; காரியத்தில் வந்தால் மெய் செய்வாரைப்போலே பொய்செய்து தலைக்கட்டும்" என்றுள்ளது. அடியார்களுக்கு மெய்யே செய்யுமாபோலே பிறர்களுக்குப் பொய்யே செய்ய வல்லவன் - என்று தாற்பரியம் தேறும். ஆண்டாள் பேசுவது இத்தகைத் தன்று. [ஏலாப் பொய்களுரைப்பான்] இதற்குப் பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான ஸ்ரீஸூக்தி வருமாறு:— "ஒற்று மஞ்சளும் மாளிகைச் சாந்துமாய் வந்தால் இதெல்லாம் எங்கு நின்றும் பெற்றாயென்று கேட்டால் 'மற்றொன்றுண்டோ? நான் புறம்பு அறிவேனோ?' என்னும்" என்று. இதன் தாற்பரியமாவது * அழகியாரிவ்வுலகு மூன்றுக்கும்

தேவிமை தகுவார் பலருளர் * என்று நம்மாழ்வாரும், * தக்கார்பலர் தேவிமார் சால வுடையீர் * என்று திருமங்கையாழ்வாரு மருளிச் செய்தபடியே பல்லாயிரம் பெருந் தேவிமார்களை யுடைய கண்ணபிரான் * கருமலர்க் கூந்தலொருத்தி தன்னைக் கடைக்கணித்து ஆங்கே யொருத்தி தன்பால் மருவி மனம் வைத்து மற்றொருத்திக் குரைத்து ஒரு பேதைக்குப் பொய் குறித்துப் புரிகுழல் மங்கையொருத்தி தன்னைப் புணர்தி அவளுக்கும் மெய்யனல்லை * என்று குலசேகரப் பெருமாளுமருளிச் செய்த படியே * கொந்தளமாக்கிப் பரக்கழித்துக் குறும்பு செய்வானோர் மகனாய் * அல்லல் விளைத்த பெருமானான கண்ணபிரான் ஆயர்பாடி கவர்ந்துண்ணும் போது செய் தருளும் லீலாசேஷ்டித விநோத விசேஷங்களில் ஒருத்தி பக்கலிலே ஸம்ச்லேஷ ரஸம் காட்டுகையில் ஒற்று மஞ்சளும் மாளிகைச் சாந்தும் பெற்றிடுவன்; அந்த இலச் சினையோடே மற்றொருத்திபக்கல் ஸம்ச்லேஷிக்க வந்திடுவனாம். அப்போது அவள் 'இந்த இலச்சினை எங்கே பெற்றது?' என்று கேளாமலிருக்க முடியாதே: கேட் டிடுவள். அப்போது ஏலாப் பொய்யொன்று உரைப்பனாம்; 'பேதாய்! என்னை யொழிய மற்றொருவனை நீ நினையாதிருப்பது போல நானும் உன்னையொழிய மற் றொருத்தியை நினையாதிருப்பவனன்றோ? இவ்விலச்சினை இங்கு முன்பு பெற்றதே யொழிய வேறு எங்கும் பெற்றதன்று' என்பனாம். இப்படியாக வுரைக்கும் ஏலாப் பொய்கள் எண்ணிறந்தவையாம். இவற்றையெல்லாம் யசோதை நன்கறிந்தவ ளானது பற்றியே * பொய்யாவுன்னைப் புறம்பல பேசுவ புத்தகத்துக்குள கேட் டேன், அய்யா வுன்னை யறிந்து கொண்டேன் * என்றாள். மெய் பேசுவதற்கு இராமனான அவதாரமும், பொய் பேசுவதற்குக் கண்ணனான அவதாரமும் வாய்த்த அழகு என்னே என்னே!

"ராமாவதாரத்தில் மெய்யோடு க்ருஷ்ணாவதாரத்தில் பொய்யோடு ஒரு வாசி யில்லை" என்று ஆசாரியர்கள் ஈடுபட்டிருப்பார்களாயிற்று. 'எம்பெருமானுடைய திருவாக்கிலிருந்து வருகிற வார்த்தை' என்கிற காரணத்தினாலன்றோ அவன் திரு வாக்கு நமக்கு உத்தேச்யமாவது; அந்தத் திருவாக்கு மெய்யாயிருந்தா லென்ன? பொய்யாயிருந்தாலென்ன? அவன் பணித்த வார்த்தை யென்கிற கௌரவத்திற்குக் குறையில்லையே. "எல்லாரு மென்றன்னை யேசினும் பேசிடினும், புல்லாணி யெம் பெருமான் பொய் கேட்டிருந்தேனே * என்கிற திருமங்கையாழ்வார் பாசுரத்தின் அழகு தான் என்னே! அந்தப் பாசுரத்தைப் பற்றித் தனியே யொரு உபந்யாஸம் மேற்பகுதியிலே ப்ராப்தமாகும்.

ப்ரக்ருதம் கண்ணனுடைய ஏலாப் பொய்களிலே ஒரு பொய்யைப் பரமபக்த மஹாகவி யொருவர் பேசி யிருப்பதை யெடுத்துரைத்து இவ்வுபந்யாஸத்தைத் தலைக்கட்டுகிறேன்.

"கஸ் த்வம் பால!, பலாநுஜ:, கிமிஹ தே?, மந்மந்திராசங்கயா,
யுக்தம் தத் நவநீதபாண்டவிவரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யஸ்யஸி?
மாத:! கஞ்சந வத்ஸகம் ம்ருகயிதும், மா கா விஷாதம் ப்ரபோ!
இத்யேவம் வநவல்லவீநிகதித: க்ருஷ்ணஸ் ஸ புஷ்ணாது ந:"

(இதன் கருத்து.) ஒருநாள் கண்ணபிரான் பிறர் மனையில் புகுந்தான்; அங்கே ஒருவருமில்லாமை கண்டு ஒரு மூலையிலிருந்த வெண்ணெய்த் தாழியிலே கையிட்டான். அப்போதே அம்மனையுடையாள் 'சடக்கென வந்து பிடித்துக்கொண்டு 'பயலே! நீ யார்?' என்கிறாள். அப்போது அவளுக்கும் கண்ணனுக்கும் நடந்த ஸம்வாதம் கேளீர்;

(கோபி) கஸ் த்வம் பால! = பயலே! நீ யார்?

(கண்ணன்) பலாநுஜ:—நான் பலராமன் தம்பி. (திருவாய்ப்பாடியிலே பலராமன் பரம ஸாதுவென்று பேர் பெற்றவன்; *மைந் நம்புவேற் கண்ணல்லாள் முன்னம் பெற்ற வளைவண்ண நன்மாமேனி தன்னம்பி நம்பியு மிங்கு வளர்ந்தது அவனிவை செய்தறியான்* (பெரிய திருமொழி. 10—7—4) என்கிறபடியே திருவாய்ப்பாடியில் பலராமன் ஓரிடத்திலும் ஒரு சேஷ்டையும் பண்ணியறியாதவனாகையாலே அவனுடைய தம்பியென்று தன்னைச் சொல்லிக்கொண்டால் அவனைப்போலே இவனும் ஸாதுவாயிருப்பனென் றெண்ணி இவள் நம்மை விட்டு விடுவள் என்று கருதிய கண்ணன் பலாநுஜ: அஹம் என்றான். இவன் கதை திருவாய்ப்பாடி முழுதும் பரவினதாகையாலே இப்பேச்சில் அவள் ஏமாற்றமடையாமல் மேலே கேட்கிறாள்;—

(கோபி) கிமிஹ தே = (தே இஹ கிம்?) பையா! நீ பலராமன் தம்பியாகவே யிரு; அதைப்பற்றிக் கவலையில்லை. இங்கு எதற்காக வந்தாய்?

(கண்ணன்) மந்மந்திராசங்கயா — ஒன்றுமில்லை; என்னுடைய மனையென்று மயங்கி வந்துவிட்டேன், இந்தச் சேரியில் எல்லா மனைகளும் வாசி தெரியாமல் ஒன்று போலே யிருக்கையாலே நம்மகமென்று மயங்கி வந்து விட்டேனென்றான்.

(கோபி) யுக்தம் தத்; நவநீதபாண்டவிவரே ஹஸ்தம் கிமர்த்தம் ந்யதா:?—பயலே! நம்மனையென்று மயங்கி உள்ளே புகுந்ததாகச் சொல்லுகிறாய்; இது ஸம்பாவிதந்தான்; ஒப்புக்கொள்ளுகிறேன்; உள்ளே புகுந்த பிறகு இது நம்மனையன்று என்று தெரிந்துகொண்டிருப்பாயல்லவா? உடனே திரும்பிப் போக வேண்டியிருக்க அது செய்யாதே வெண்ணெய்த்தாழியில் தாரார் தடந்தோள்களுள்ளளவும் கைநீட்டினாயே, இது என்ன ஸமாசாரம்! என்றாள்.

(கண்ணன்) மாத:! கஞ்சந வத்ஸகம் ம்ருகயிதும்—அம்மா! நான் கன்று காலிகளை மேய்ப்பவனென்பது உனக்குத் தெரியுமே; *கன்று மேய்த்தினிதுகந்த காளையல்லவா நான்; மேய்த்துக்கொண்டிருந்த கன்று குட்டிகளில் ஒன்று கைகழியப் போயிற்று; அதைத் தேடிக்கொண்டே வருகிறேன்; அது ஒருகால் இந்த வெண்ணெய்த் தாழியில் புகுந்து ஒளிந்து கொண்டதோ என்னவோ! பார்ப்போமென்று கைவிட்டுப் பார்த்தேனத்தனை; வேறொன்றுமில்லை தாயே! என்றான்.

இதுகேட்ட கோபியானவள் 'பயலே! ஒரு நாள் தென்னைமரத்தின் மேலேறி, 'எதற்காக ஏறினாய்' என்று கேட்டவளுக்கு 'கன்று குட்டிக்குப் புல் பிடுங்க ஏறினேன்' என்று சொன்னவனல்லவா நீ; உன் பேச்சு வெகு பொருத்தமாயிருக்கிறதப்பா! என்று சொல்லிக்கொண்டே இவனைக் கம்பத்தில் கட்டிவைப்போமென்று

தாம்பை யெடுத்தாள்; தாம்பால் கட்டுண்டு கிடப்பது கண்ணனுக்கு ப்ரியமேயானாலும் இன்னும் பல மனைகளிலே புகுந்து "அவ்வவ்விடம்புக்கு அவ்வாயர் பெண்டிர்க்கு அணுக்கனாய்க், கொவ்வைக் கனிவாய் கொடுத்துக் கூழைமை செய்ய" வேண்டிய காரியங்கள் பல பல மனோரதத்திலிருக்கையாலே அதற்கு இடையூறாக இங்கே கட்டுண்டு கிடக்க விரும்பாமல் அழத் தொடங்கினான்; அதுகண்ட கோபி நடுநடுங்கி விட்டாள்; இச்செய்தி எசோதையின் செவியில் எட்டுமாகில் *என்று மென் பிள்ளைக்குத் தீமைகள் செய்வார் அங்ஙனமாவர்களே* என்று கைசுடுக்கி வைவளே! நம் கதி என்னாகுமோ? என்றஞ்சிக் கண்ணனை ஸமாதானப்படுத்தத் தொடங்கினாள்,

(கோபி) மா கா விஷாதம் ப்ரபோ=கண்ணா! அழேல் அழேல்; இதோ கைநிறைய வெண்ணெயைத் தருகிறேன்; இன்னமும் வேண்டிய மட்டில் தாழியில் வெண்ணெய் தடங்கையார விழுங்கிப் போவாயாக என்று சொல்லி வெண்ணெய்த் தாழிகளை யெல்லாம் அவனுக்கே யாக்கி மகிழ்ந்தாளாயிற்று. இதில் 'மாதஃ! கஞ்சக வத்ஸகம் ம்ருகயிதும்' என்றது ஏலாப்பொய். இஃது ஒன்றா? இங்ஙனே பல்லாயிரம்..... *

## முதற் பகுதியின் முடிவில் விண்ணப்பம்

அன்புமிக்க ஆரியர்காள்! நமது ஸ்ரீராமாநுஜனுக்கு இருநூறு மாஸ பூர்த்தியை முன்னிட்டு இருநூறு உபந்யாஸங்கள் எழுதவேணுமென்று ஒரு உத்தேசம் உண்டானது எம்பெருமானது திருவுள்ளத்தினாலத்தனை. 200 மாதங்கள் முடிந்ததற்காக 200 உபந்யாஸங்கள் எழுதவேணுமென்று யாதொரு நிர்ப்பந்தமு மில்லை. எங்கும் கண்டதுமில்லை. ஆனாலும் யாத்ருச்சிகமாகவே ஒரு மநோரதம் தோன்றிற்று. கீழே சில வருஷங்களுக்கு முன்னே அத்புதோபந்யாஸமாலை யென்றும், மதுரோபந்யாஸமாலை யென்றும், உபந்யாஸ விம்சதியென்றும், அறுபத்திரண்டு உபந்யாஸமாலையென்றும், அறுபத்துமூன்று உபந்யாஸமாலையென்றும், அறுபத்துநான்கு உபந்யாஸமாலையென்றும், உபந்யாஸத்ரயமென்றும்........இப்படி பல சீர்ஷிகைகளுடன் பல வுபந்யாஸங்கள் வெளியிட்டிருக்கிறேன்; அவை யெல்லாம் நமது அன்பர்களுக்கு அவ்வவகாலங்களில் கிடைத்திருக்கின்றன. இவைதவிர, நல்வார்த்தை நானூறு, எழுபத்துநான்கு விருந்துகள்........என்னும் பெயர்களாலும் பல வெளியீடுகள் அன்பர்களுக்குக் கிடைத்திருக்கின்றன. ரஸிகர்களும் விவேகிகளுமான ஸஹ்ருதயர்கள் இவற்றையெல்லாம் தினப்படி யநுபவித்து ஆனந்தித்து வருவதாகத் தெரிவித்து வருகிறார்கள்.

இப்போது வெளியிடப்பட்டு வருகிற உபந்யாஸ சதத்வயம் அவைபோலல்லாமல் அடியேனுடைய நெஞ்சையும் ஈர்க்கின்றதாக அமைந்து வருகின்றது. இதில் அனேக மஹான்களுடையவும் பல கோஷ்டிகளுடையவும் திருவுருவப் படங்கள், வெளியிட நேர்ந்ததும் அடியேனுடைய மநோரதத்தில் ஒரு மூலையிலும் இல்லாமலிருந்ததே. இன்னும் பல மஹான்களுடைய திருவுருவப் படங்களை சேகரிக்க

முயன்று வருகின்றேன். ஆப்தர்கள் அன்போடும் அருளோடும் அனுப்பும் திருவுருவப் படங்களையும் க்ருதஜ்ஞதையுடன் ஏற்றுக்கொள்வேன். எவ்விதமான பேதத்தையும் பாராட்டாமல், ப்ராஜ்ஞர்களென்று போற்றப்படும் பெரியார்களின் திருவுருவங்களை யெல்லாம் உலகம் ஸேவிக்கப் பாங்காக வெளியிட மிக்க ஆவல் கொண்டிருக்கிறேன். திருமழிசைப் பிரான் "தெரித்தெழுதி வாசித்துங் கேட்டும் வணங்கி வழிபட்டும் பூசித்தும் போக்கினேன் போது" என்றருளிச் செய்த பாசுரத்தைத் தினந்தோறும் சிந்தை செய்பவனடியேன். கூடுமானவரையில் அவருடைய தினசரியையே அடியொற்றி அந்தவகையிலேயே வாழ்நாளைக் கழிக்க வேணுமென்கிற ஆவல் பெரிதுமுடையேன். ஆவல் மட்டுமில்லை; ஆவல் ஸபலமாகப் பெற்றும் வருகிறேன்.

ஸ்ரீமந்நாதமுனிகள் ஸன்னிதி, மன்னார்குடி.



ஆளவந்தார். ஸ்ரீமந்நாதமுனிகள். மணவாளமாமுனிகள்.

இங்குக் கடைசியாக அமைத்த ஏலாப் பொய்களுரைப்பானுபந்யாஸமானது நேற்று திருவாடிப்பூரத்தன்று தேவப்பெருமாளும் ஆண்டாளும் சேர்ந்தசேர்த்தியிலே நாச்சியார் திருமொழியநுஸந்தானமாகும் போது "மாலாய்ப் பிறந்த நம்பியை மாலே செய்யும் மணாளனை, ஏலாப் பொய்களுரைப்பானை இங்கே போதக் கண்டீரே." என்கிற பாசுரம் ஸேவிக்குங்கால் * உள்ளெலாமுருகிக் குரல் தழுத் தொழிந்து உடம்பெலாங் கண்ணநீர் சோர நின்று அன்றிரவே யெழுதப் பெற்றது. இதைத் தொடர்ந்து, ஆழ்வார்களுமாண்டாளுமநுபவித்த ஸ்ரீக்ருஷ்ண லீலைகளையெல்லாம் அடைவேயெழுத வேணுமென்றாசை கிளர்ந்து இரண்டாம் பகுதியைத் தொடங்குகிறேன். சரித்திரங்களை முன்னம் இருபது முப்பது உபந்யாஸங்களாக எழுதிவிட்டுப் பிறகு அவற்றில் சில ரஸாநுபவங்கள் செய்யக் குதூஹலம். ... ...

**உபந்யாஸ சதத்வயத்தில் முதற்பகுதி முற்றிற்று.**

# உபந்யாஸ சதத்வயத்தில் ப்ரதமசதகத்திலுள்ள உபந்யாஸங்களின் அடைவு.


| | பக்கம். |
|---|---|
| 1. நாம் பெற்ற பாக்ய விசேஷங்கள் ... | 1 |
| 2. நாமனுபவிக்குமானந்தத்தைப் பற்றிய ஆனந்தம் ... | 2 |
| 3. அபுநராவ்ருத்தியும், புநராவ்ருத்தியும். | 3 |
| 4. அறுதொழிலந்தணர் பெருமை ... | 5 |
| 5. வேதாத்யயனத்தின் அருமை பெருமைகள் ... | 7 |
| 6. to 10. வேதபாஷ்யகாரர்களின் அநவதான விளக்கம் ... | 7 |
| 11. உத்தரமேரூர் கனபாடி ஸ்வாமியின் பெருமை ... | 13 |
| 12. எம்பெருமானுருடைய லௌகிக சாதுர்யம் ... | 14 |
| 13. ஸந்யாஸிகளின் மடாதிபதித்வம் ... | |
| 14. காலஞ்சென்றபின் விளையுங் கேள்விகள் ... | 16 |
| 15. ஆசார்ய ப்ரபாவ விளக்கம் ... | 18 |
| 16. மங்களம்பாடி மஹான்களின் மஹிமை ... | 19 |
| 17. நிரவத்ய வித்யாப்ரபாவம் ... | 20 |
| 18. ஸ்ரீமத் குன்றபாக்கம் ஸ்வாமிவைபவம். | 21 |
| 19. வால்மீகி மஹர்ஷி வைபவம் ... | 23 |
| 20. ஸ்ரீராமாயணத்தின் பெருமை ... | 24 |
| 21. ஸ்ரீமத் புரிசை ஸ்வாமி வைபவம் ... | 25 |
| 22. வைசாகோத்ஸவ வைபவம் ... | 27 |
| 23. பௌண்டரீகபுரம் ஸ்வாமியின் பெருமை ... | 29 |
| 24. கோயில் கோவிந்தாசார்ய ஸ்வாமி ... | 30 |

| | பக்கம் |
|---|---|
| 25. ஸஹ்ருதய ஸுஹ்பரமணிப்ரேமம் ... | 32 |
| 26. ஸ்ரீமதழகிய சிங்கரின் ஆபிப்க்கியம்... | 34 |
| 27. அஹோபில ஸம்ப்ரோக்ஷணம் ... | 36 |
| 28. உபந்யாஸங்களைப்பற்றி யுபந்யாஸம். | 37 |
| 29. அஹோபிலோபந்யாஸங்களுக்குக் கிஞ்சித்காரா ... | 39 |
| 30. அஹோபிலோபந்யாஸ விஷய ஸூசிகை ... | 40 |
| 31. இஜ்யாராதன மாஹாத்ம்யம் ... | 40 |
| 32. ஆனந்த மயாதிகரண சர்ச்சை ... | 43 |
| 33. ,, ,, ... | 45 |
| 34. நம்மாழ்வார் வைபவம் ... | 46 |
| 35. ஸ்ரீவாமநாவதாரம் ... | 50 |
| 36. பாதுகாப்ரபாவம் ... | 53 |
| 37. ஸ்ரீராமாயண ஸாரம் ... | 55 |
| 38. ஸ்ரீபாஷ்யஸ்ம்ருத்யதிகரண சர்ச்சை. | 57 |
| 39. ,, ,, ... | 59 |
| 40. ஸத்ஸம்பதுபந்யாஸம் ... | 60 |
| 41. ஸாரநிஷ்கர்ஷோபந்யாஸம் ... | 61 |
| 42. கஜேந்திரமோக்ஷம் ... | 63 |
| 43. கலியன் வைபவம் ... | 66 |
| 44. துலாபார சரிதம் ... | 68 |
| 45. சபரீ மோக்ஷம் ... | 71 |
| 46. வைராக்ய வைபவம் ... | 74 |
| 47. ஏகாதசீ மஹாத்ம்யம் ... | 77 |
| 48. புராணப் பெருமை ... | 77-B |
| 49. ஸ்ரீகுஹன் பெருமை ... | 79 |

| | பக்கம் |
|---|---|
| 50. வாலிமோக்ஷம் | ... 82 |
| 51. த்வாதசீமாஹாத்ம்யம் | ... 85* |
| 52. சரணாகதி ப்ரபாவம் | ... 86* |
| 53. ப்ரஹ்லாதபக்தி | 87* |
| 54. யாகப்ரசம்ஸை | ... 89, 151 |
| 55. ப்ரமந்தஸாரோபந்யாஸம் | ... 91 |
| 56. ருக்மிணீகல்யாணம் | ... 93 |
| 57. வத்ஸலா கல்யாணம் | ... 95 |
| 58. தசாவதார வைபவம் | ... 97 |
| 59. திவ்ய தேசவைபவம் | ... 100 |
| 60. கீதார்த்த ஸ்ங்க்ரஹம் | ... 105 |
| 61. வித்யாதான மஹிமை | ... 109 |
| 62. பாகவத மாஹாத்மியம் | ... 112 |
| 63. அஹோபிலமாஹாத்மியம் | ... 114 to 130 |
| 64. ந்ருஸிம்ஹாஸ்தான வைபவம் | ... 131 |
| 65. காக சரணாகதி | ... 134 |
| 66. தத்வத்ரயோபந்யாஸம் | ... 139 |
| 67. திருமலை ப்ரபாவம் (ஸம்ஸ்க்ருதம்) | ... 142 |
| 68. த்ரிஜடா சரணாகதி | ... 143 |
| 69. வேதலக்ஷணோபந்யாஸம் | ... 145, 194 |
| ... பசுவதமீமாம்ஸா | ... 151 |
| 70. பிராட்டியின் பெருமை | ... 157 |
| 71. தத்த்வமஸிச்ருதிவிசாரம் | ... 161 |
| 72. ,, ,, | ... 162 |
| 73. க்ருத்ஸ்நப்ரஸக்தியதிகரண சர்ச்சை. | 163 |
| 74. ,, ,, | ... 164 |
| 75. ப்ரயோஜநவத்த்வாதிகரணம் | ... 165 |

| | பக்கம் |
|---|---|
| 76. ஸர்வதாநுபபத்தியதிகரணம் | ... 166 |
| 77. உபயலிங்காதிகரண சர்ச்சை | ... 168 |
| 78. ,, ,, | ... 169 |
| 79. ஸர்வாங்நாநுமதியதிகரணம் | ... 170 |
| 80. ஆவ்ருத்தியதிகரணம் | ... 171 |
| 81. தததிகமாதிகரணம் | ... 171 |
| 82. நிசாதிகரணம் | ... 172 |
| 83. தக்ஷிணாயநாதிகரணம் | ... 173 |
| 84. ஸ்ரீபாஷ்யசரமஸூத்ர சர்ச்சை | ... 173 |
| 85. விசிஷ்டாத்வைதவைபவம் | ... 179 |
| 86. வேதவிபாக மீமாம்ஸாவிபாகம் | ... 180 |
| 87. சாரீரகமீமாம்ஸாபாஷ்யங்களின் வாசி | ... 181 |
| 88. சதுரோக்திவிந்யாஸம் | ... 182 |
| 89. உயரன்பர் உயிர்நண்பர் | ... 183 |
| 90. வியாஸவால்மீகி ஸம்வாதம் | ... 185 |
| 91. ப்ரமாணப்ராபல்யோபந்யாஸம் | ... 188 |
| 92. இரு பிராட்டிமார்க்குப் பள்ளியில் பரீக்ஷை | ... 192 |
| 93. வேதலக்ஷணவிசாராநுபந்தம் | ... 194 |
| 94. தேவாலயஸத்ஸம்பிரதாயம் | ... 198 |
| 95. ஆசார்ய புருஷமடாதிபதிகள் | ... 201 |
| 96. தேசிகன் திருவவதாரஸ்தல விமர்சம், | 203 |
| 97. தென்னாசார்ய வ்யபதேச விமர்சம் | ... 204 |
| 98. தேசிகவைபவாநுபவம் | ... 206 |
| 99. மணவாளமாமுனிகளின் பரமப்ரா மாணிகத்வம் | ... 208 |
| 100. ஏலாப்பொய்களுரைப்பான் | ... 211 |

முதற்பகுதி யுபந்யாஸங்களின் அட்டவணை

முற்றிற்று.



காட்டுமன்னார் ஸன்னிதியில் ஆளவந்தாருத்ஸவத்தில்

(8—8—65ல்) உபந்யாஸ கோஷ்டி P. B. A.